ஒன்று பட்டால் உண்டு வாழ்வு என்பதை
நன்றே விளக்கிடும் உன்னத தமிழ் சமூகச் சித்திரம்



ஸ்ரீ ராஜராஜேஸ்வரி பிலிம் கம்பெனியின்

# நவஜீவனம்

இப்பொழுது சென்னை கிரௌன், ஸ்டார் இரு
தியேட்டர்களிலும் மற்றும் தமிழ்நாடு, ஆந்திரதேசத்தின்
எல்லா முக்கிய நகரங்களிலும் நடைபெறுகிறது...



# விற்பனையாளர் கால்வலியினால் முடமானார்



## பின்பு 'க்ருஷென்' அதன் விளைவை வெற்றிகரமாகத் தாக்கியது

விற்பனையாளர் காந்தி, மேல்நாட்டு பிரயாணத்தினின்று திரும்பியபோது அவரை ரயிலினின்று தூக்கி வர வேண்டியதாயிற்று. மறுபடியும் வேதனை உண்டாக்கும் கால்வலி அவரை அதிவிரைவில் பிடித்தது. சில நாட்கள் கழிந்து எவ்வாறோ காரியாலயத்தை அடைந்து மானேஜரைக் கண்டு அவர் ராஜிநாமாக் கொடுத்தார்......

ஆறு மாதங்களுக்குப் பின்: என்ன மாறுதல். அதிக விற்பனையின் காரணமாக காந்தி கால் வருடப் பரிசைப் பெற்று விட்டார். அவரது சகாக்கள் தங்கள் சந்தோஷத்தைத் தெரிவிக்க அவரைச் சூழ்ந்து கொண்டனர்.

"உங்கள் ரகசியம் என்ன" என்று அவர்கள் கேட்டனர்.

"தினம் காலை உண்டிக்கு முன் "க்ருஷன்" சாப்பிடுவதுதான்" அவர் கொடுத்த பதில்.

கால்வலி உபத்திரவம், நரம்புத் தளர்ச்சி இவைகள் சுத்தமற்ற ரத்த ஓட்டத்தின் அறிகுறி. அவைகள் ரத்தத்தில் விஷம் கலந்திருப்பதைக் காண்பிக்கின்றன. 'க்ருஷன்' ஆறுவித இயற்கை உப்புகளின் சேர்க்கையாதலினால் உடல் சுத்தத்தை உறுதியாக்கி ரத்த ஓட்டத்தை துப்புரவாக்குகிறது. புதிய பலத்துடன் சுத்தம் செய்யப்பட்ட நீங்கள் புதுவிரத்துடன் பரிணமிக்கிறீர்கள். பின்பு கால்வலி நரம்புத் தளர்ச்சி சம்பந்தப்பட்ட நோய்கள் உங்களை விட்டுச் செல்கின்றன.

இன்றே 'க்ருஷன்' வாங்குங்கள்
கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் எங்கும் கிடைக்கும் விலை ரூ. 1-10 (மருந் சன் பெட்டியில்)




## நீங்கள் கூட அந்த 'க்ருஷன்' உணர்ச்சியை அடையலாம்

# தியாகராய செட்டி ஹைஸ்கூல்

## வண்ணாரப்பேட்டை, சென்னை

★

## ஸ்காலர்ஷிப் உதவி நிதிக்காக

ஹைஸ்கூல் கட்டிடத்தில் நடத்தப்படும் மிகவும் உயர்தரமான

## சங்கீத விழா

### ஜூலை 22 முதல் ஆகஸ்டு 1 வரை

★ நிகழ்ச்சிக் குறிப்பு

### 22 - 7 - 49 வெள்ளி மாலை 6 மணி

*கந்தர்வகான ரத்ன, ஸர்ந்தர்வ வினோத*

| | | |
|---|---|---|
| ஸ்ரீ எம். கே. தியாகராஜ பாகவதர் | ... | பாட்டு |
| ஸ்ரீ சேதுராமையா | ... | பிடில் |
| குந்தாலம் ஸ்ரீ சிவவடிவேல் பிள்ளை | ... | மிருதங்கம் |
| ஸ்ரீ டி. எஸ். விஸ்வநாத அய்யர் | ... | கடம் |
| ராயபுரம் ஸ்ரீ சுப்ரமணியம் | ... | கஞ்சிரா |

### 23-7-49 சனிக்கிழமை மாலை 4 மணி முதல் 6-45 வரை

| | | |
|---|---|---|
| ஸ்ரீ எம். கே. ராஜமாணிக்கம் | ... | பாட்டு |
| ஸ்ரீ டி. பாலசுப்பராயலு | ... | பிடில் |
| ஸ்ரீ எல். வி. எஸ். நாராயணன் | ... | மிருதங்கம் |
| ராயபுரம் ஸ்ரீ சுப்ரமணியம் | ... | கஞ்சிரா |

### இரவு 7 மணி முதல் 9 மணி வரையில்

குமாரி கமலா - *பரத நாட்டியம்*

*(பரத நாட்டிய கலாசேகர் வழுவூர் ஸ்ரீ ராமையா பிள்ளை சிஷ்யை)*

### 24 - 7 - 49 ஞாயிற்றுக்கிழமை மாலை 6 மணிக்கு

| | | |
|---|---|---|
| *சங்கீத வித்வான்* ஸ்ரீ ஹொன்னப்ப பாகவதர் | ... | பாட்டு |
| மைசூர் ஸ்ரீ புவனேஸ்வர ஐயா | ... | பிடில் |
| மைசூர் ஸ்ரீ எம். எஸ். வீரபத்ரய்யா | ... | மிருதங்கம் |
| வித்வான் ஸ்ரீ வேலாயுதம் | ... | கஞ்சிரா |

### 25 - 7 - 49 திங்கள் மாலை 6 மணிக்கு

திருச்சூர் ஸ்ரீமதி பிரேமாவதி — *பரத நாட்டியம்*

*(ஸ்ரீ கண்ணப்ப முதலியார் அவர்களின் சிஷ்யை)*

| | | |
|---|---|---|
| ஸ்ரீ எம். எஸ். சேஷாத்ரி அய்யங்கார் | ... | பாட்டு |
| மிருதங்க வித்வான் ஸ்ரீ எம். ஆர். துரைராஜ் அய்யர் | ... | மிருதங்கம் |

### 26 - 7 - 49 செவ்வாய்க்கிழமை மாலை 6 மணிக்கு

*தருமபுர ஆஸ்தான வித்வான் இசையரசு*

| | | |
|---|---|---|
| ஸ்ரீ எம். எம். தண்டபாணி தேசிகர் | ... | பாட்டு |
| *திருவாங்கூர் ஆஸ்தான வித்வான்* ஸ்ரீ கோவிந்தராஜ பிள்ளை | ... | பிடில் |
| மதுரை ஸ்ரீ ஏ. கண்ணன் | ... | மிருதங்கம் |
| ஸ்ரீ டி. எஸ். விஸ்வநாத அய்யர் | ... | கடம் |
| ஸ்ரீ ராமாமிர்தம் | ... | கஞ்சிரா |

## 27 - 7 - 49 புதன்கிழமை மாலை 6 மணிக்கு

கானகலாதர மதுரை ஸ்ரீ மணி ஐயர் ... பாட்டு
சங்கீத கலாநிதி ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை ... பிடில்
பழனி ஸ்ரீ எம். சுப்ரமணிய பிள்ளை ... மிருதங்கம்
மன்னார்குடி ஸ்ரீ ஆறுமுகம் பிள்ளை ... கஞ்சிரா
மன்னார்குடி ஸ்ரீ நடேச பிள்ளை ... மோர்சிங்

## 28 - 7 - 49 வியாழக்கிழமை மாலை 6 மணிக்கு

மதுர கீதவாணி ஸ்ரீமதி என். ஸி. வஸந்தகோகிலம் & பார்ட்டி - பாட்டு

## 29 - 7 - 49 வெள்ளிக்கிழமை மாலை 6 மணிக்கு

திருவாங்கூர் சமஸ்தான வித்வான்
ஸ்ரீ ஜி. என். பாலசுப்ரமணியம் ... பாட்டு
சங்கீத கலாநிதி ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை ... பிடில்
பழனி ஸ்ரீ எம். சுப்ரமணிய பிள்ளை ... மிருதங்கம்
மன்னார்குடி ஸ்ரீ ஆறுமுகம் பிள்ளை ... கஞ்சிரா
மன்னார்குடி ஸ்ரீ நடேச பிள்ளை ... மோர்சிங்

## 30 - 7 - 49 சனிக்கிழமை மாலை 6 மணிக்கு

நகைச்சுவை அரசு
ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணன் & பார்ட்டி ... கிந்தனார் காலக்ஷேபம்

## 31 - 7 - 49 ஞாயிறு மாலை 6 மணிக்கு

ஸப்தஸ்வர விநோத
ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் ... பாட்டு
திருவல்லூர் ஸ்ரீ சுப்ரமணியம் ... பிடில்
கல்பாத்தி ஸ்ரீ ராமநாதன் ... மிருதங்கம்
ஸ்ரீ டி. எஸ். வில்வாத்ரி அய்யர் ... கடம்
ராயபுரம் ஸ்ரீ சுப்ரமணியம் ... கஞ்சிரா

## 1 - 8 - 49 திங்கள் மாலை 6 மணிக்கு

கான கோகில
ஸ்ரீமதி எம். எல். வசந்தகுமாரி & பார்ட்டி ... பாட்டு

புரோகிராம் மாறுதலுக்குட்பட்டது

★

சீஸன் டிக்கெட்டுகள்:

முதல் வகுப்பு ரூ. 30  இரண்டாவது வகுப்பு ரூ. 20
மூன்றாவது வகுப்பு ரூ. 15  காலரி ரூ. 7—8—0

★

டிக்கெட்டுகள் கிடைக்குமிடம்:

1. தியாகராஜ செட்டி ஹைஸ்கூல், வண்ணாரப்பேட்டை
2. குட் வெல் டிராப்பரி, 213, தங்கசாலைத் தெரு (சுமைதாங்கி அருகே)
3. ராஜா கபே, யானைக்கவுனி
4. ஸ்ரீ சாய் மணவாளா ஸ்டோர்ஸ், 25, தியாகராயா ரோடு, தியாகராயநகர்
5. பி. எஸ். மணி & கம்பெனி. 2/4, மவுண்ட் ரோடு

எம். எம். தண்டபாணி தேசிகர்,
ஆர்கனைஸர்

மைக், ஒலிபெருக்கி ஏற்பாடு: சந்திரா ரேடியோ சர்வீஸ்
மின்சார அமைப்புகள்: சிவா அண்ட் பதி & கம்பெனி



# கல்கி பொருளடக்கம்




மலர் 8 | இதழ் 51 — ஜூலை 17 — விரோதி ஆடி 2உ




மலர் 8 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதி | இதழ் 51

# என்ன செய்தி?

## பின்பற்றலாம்!

சமீபத்தில் சயாம் தேசத்திலே ஒரு சம்பவம் நிகழ்ந்ததாகப் பத்திரிகைச் செய்திகள் குறிப்பிடுகின்றன. அங்கு பரீட்சையில் தேறவேண்டிய மாணவர்கள் குறைந்தபட்சம் ஐம்பது மார்க்குகள் பெறவேண்டும். நாற்பத்தொன்பது மார்க்குகளை பெற்றார்கள் என்பதற்காக இருபது மாணவர்கள் 'பெயில்' என்று கல்வி இலாகா முடிவு செய்துவிட்டது. அத்தகைய முடிவு சயாம் பார்லிமெண்டு அங்கத்தினரிடையே கொதிப்பை உண்டாக்கியது. அவர்கள், மேற்படி இருபது மாணவர்களின் தலையில் கை வைத்த அதிகாரிகளைக் கடுமையாகக் கண்டித்தார்கள். கல்வி மந்திரியோவென்றால், தம்முடைய இலாகாவின் கண்டிப்பைத் தளர்த்த முடியாது என்று கூறிவிட்டார். பிறகு சயாம் மந்திரி சபையே கூடி, கல்வி மந்திரியின் கூற்றை நிராகரித்துவிட்டு அந்த இருபது மாணவர்களும் தேறிவிட்டதாக முடிவு செய்தது. அந்த நல்ல உதாரணத்தை இங்குள்ளவர்களும் பின்பற்றுவராயின், ஒன்றிரண்டு மார்க்குகளே குறைவு என்பதற்காகப் 'பாஸ்' ஆகாமல் மனம் உடைந்து கிடக்கும் பல மாணவர்களுக்கும் கதிமோட்சம் பிறக்கும்.

## வெற்றி பெறுவாராக!

"நீங்கள் ருஷ்யாவில் ஸ்தானிகராக இருந்தபோது ஸ்டாலினைக் கண்டு பேசியது உண்டா?" என்று சமீபத்தில் ஒரு நிருபர் ஸ்ரீமதி விஜயலக்ஷ்மியைக் கேட்டார். "ஸ்டாலினை நான் ஒரு தடவைகூடப் பார்க்கவில்லை" என்று அவர் பதில் அளித்தார். ஒருவேளை அமெரிக்கா மீதும் ஐக்கிய நாடுகள் சபை மீதும் ஸ்டாலினுக்கு உள்ள கோபம் காரணமாக அவர், ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி தம்மைக் கண்டு பேசுவதற்குச் சந்தர்ப்பம் அளிக்காமல் இருந்திருக்கலாம்! ஏனெனில், ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி தமது நாவன்மையால் அமெரிக்காவிலும் உலக நாடுகள் சபையிலும் பெரும் புகழும் பெற்றவர் அல்லவா?

ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி ருஷ்ய ஸ்தானிகர் பதவியிலிருந்து விலகியபிறகு, அங்கு இந்தியாவின் ஸ்தானிகராகச் செல்வதில் உற்சாகம் உள்ளவர்கள் யாரும் இல்லை என்று வதந்திகள் நிலவின. கடைசியாக, ஸ்ரீ எஸ். ராதாகிருஷ்ணன் ருஷ்ய ஸ்தானிகராக நியமிக்கப்பட்டிருக்கிறார் என்பது சகலருக்கும் சந்தோஷத்தைக் கொடுக்கும்.

உலகிலுள்ள எல்லா நாடுகளுடனும், முக்கியமாக எல்லா வல்லரசுகளுடனும் நல்லுறவு கொண்டிருக்கவே இந்தியா விரும்புகிறது. இந்தியா ருஷ்யாவின் நட்பையே நாடுவதாக பண்டித ஜவாஹர்லால் நேரு சிறிதும் சந்தேகத்துக்கு இடமின்றி அடிக்கடி கூறி வந்திருக்கிறார். ஆனால், இந்தியா விஷயத்தில் ருஷ்யாவின் நிலைமை என்னவென்பது தெளிவாகத் தெரியவில்லை. அறிஞர்களுக்கும் கலைஞர்களுக்கும் ருஷ்யாவில் மிகுந்த மதிப்பு உண்டு. எனவே, பல அரிய நூல்களின் ஆசிரியரும், உலகப் பிரசித்தி பெற்ற தத்துவஞானியும், பேராசிரியருமான ஸ்ரீ எஸ். ராதாகிருஷ்ணன், இந்தியாவுக்கும் ருஷ்யாவுக்கும் நல்லுறவை ஏற்படுத்தும் முயற்சியில் வெற்றி பெறுவாராக!

## அரைக்கோடி மக்களின் நிலை

சுமார் அரைக் கோடி இந்தியர்கள் அன்னிய நாடுகளில் வசிக்கிறார்கள். அவர்கள் வசிக்கும் ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு விதமான பெரும் பிரச்னை அவர்களை நோக்கி நிற்கிறது. அந்தப் பிரச்னைகள் திருப்திகரமாகத் தீருவதற்கு மூன்று முக்கிய சாதனங்கள் தேவை. முதலாவதாக அந்தந்த நாட்டில் வசிக்கும் இந்தியர்களிடையே ஒற்றுமை நிலவ வேண்டும்; இரண்டாவதாக இந்திய சர்க்காரின் ஆதரவு வேண்டும்; மூன்றாவ

தாக இந்திய மகா ஜனங்களின் அனுதாபத்தைப் பெறவேண்டும்.

திரைகடலைக் கடந்து சென்றுள்ள இந்திய மக்களுக்கு இந்திய சர்க்காரின் ஆதரவும் ஜனங்களின் அனுதாபமும் பூரணமாக இருக்கின்றன. எனினும், வெளி நாட்டிலுள்ள இந்தியர்களிடையே ஒற்றுமை யிருந்தாலன்றி சர்க்காரின் ஆதரவும் ஜனங்களின் அனுதாபமும் அதிக பலனை அளித்துவிட முடியாது. எனவே, ஒற்றுமையைக் குலைப்பதற்கான காரியத்தில் எவரும் ஈடுபடக் கூடாது.

## ஆலோசித்துப் பாருங்கள்

மலாயாவில் இந்திய முதலாளிகள் சிறைப் பட்டிருக்கிறார்கள். இந்தியத் தொழிலாளிகளின் எதிர்காலமோ இருள் படர்ந்து கிடக்கிறது. இந்த நெருக்கடியிலே மலாயா இந்தியர் காங்கிரஸ் அமைப்பில் ஒரு புதிய ஷரத்தைச் சேர்க்க உத்தேசித்திருக்கிறார்கள் என்று செய்திகள் கூறுகின்றன. மலாயாவைத் தாயகமாகக் கொண்டு மலாயாவிடம் விசுவாஸம் காட்டும் இந்தியர்களுக்கு மாத்திரமே மேற்படி காங்கிரஸில் இடம் உண்டு என்பதே புதிய ஷரத்து.

மலாயாவிலுள்ள இந்தியர்கள் மலாயாவிடம் விசுவாஸம் காட்ட வேண்டும் என்பதை யாரும் ஆட்சேபிக்கவில்லை. வெளி நாடுகளில் வசிக்கும் இந்தியர்கள் அந்தந்த தேசத்தின் க்ஷேமத்துக்குக் குந்தகமாக நடந்து கொள்ளக் கூடாது என்று மகாத்மா காந்தி முதல் இந்தியத் தலைவர்கள் எத்தனையோ வருஷங்களாகச் சொல்லி வருகிறார்கள். மலாயாவைத் தாயகமாகக் கொள்ளவேண்டும் என்ற விஷயம், அங்கு பிரஜா உரிமைப் பிரச்னை எழும்போது ஆலோசிக்கப் படவேண்டியதாகும். அரசியல் சண்டமாருதத்திலும் கலகத் தீயிலும் சிக்கித் தவிக்கும் மலாயாவிலே இப்போது மேற்படி பிரச்னையை எழுப்புவது உசிதமா? இவ்விஷயங்களை அங்குள்ள இந்தியப் பிரமுகர்கள் ஆலோசித்துப் பார்த்து வீண் தகராறு ஏற்படாமல் தவிர்க்க வேண்டும்.

# டாக்டர் அம்பேத்கர்

1947-ம் வருஷம் ஆகஸ்ட் மாதம் 15-ம் தேதி பண்டித ஜவாஹர்லால்ஜியின் தலைமையின் கீழ் சுதந்திர இந்தியாவின் முதலாவது மந்திரி சபை அமைக்கப் பட்டது. அந்த மந்திரி சபையில் அங்கம் வகித்தவர்களுடைய பெயர்களைப் பத்திரிகையில் படித்தபோது எல்லோருக்கும் ஒருவகையான ஆச்சரியம் உண்டாயிற்று. ஏனெனில், அதில் டாக்டர் அம்பேத்கருடைய பெயரும் காணப்பட்டது.

டாக்டர் அம்பேத்கர் தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சேர்ந்தவர். அச்சமூகத்தின் வகுப்புவாதத் தலைவராகப் பல காலம் விளங்கினார். இந்தியாவின் சுதந்திர இயக்கத்தை எப்போதும் தாக்கி வந்தார். அவரைப்போலக் காங்கிரஸ் மகா சபையையும் நம்முடைய மாபெரும் தலைவர்களையும் திட்டியவர்கள் யாருமே கிடையாது என்று கூடச் சொல்லலாம். ஆகையால், அத்தகையவர் சுதந்திர இந்திய மந்திரி சபையில் இருப்பார் என்று யார் எதிர்பார்த்திருக்க முடியும்? — வேறு யார் எதிர்பார்த்திருந்தாலும் எதிர்பார்க்காவிட்டாலும் டாக்டர் அம்பேத்கர் நிச்சயமாக எதிர்பார்த்திருக்க முடியாதுதான்!

காங்கிரஸ் மகாசபைக்குக் கட்சி வேற்றுமை எதுவும் கிடையாது என்பதற்கும், தேச நன்மை ஒன்றையே அது பிரதானமாகக் கருதுகிறது என்பதற்கும் டாக்டர் அம்பேத்கர் ஒரு பிரத்தியட்ச ருசுவாக விளங்குகிறார்.

டாக்டர் அம்பேத்கருடைய அரசியல் கொள்கை எதுவாக இருந்தபோதிலும் அவர் இந்தியாவில் உள்ள மிகச் சிறந்த அறிவாளிகளில் ஒருவர். ஆகவே அத்தகையவரை மத்திய சர்க்கார் மந்திரியாகச் சேர்த்துக்கொண்டது, நம்முடைய தலைவர்கள் சுதந்திரம் கிடைத்த பிறகு செய்த புத்திசாலித்தனமான காரியங்களில் ஒன்றாகும்.

டாக்டர் அம்பேத்கரும் புத்திசாலித்தனமான காரியத்தையே செய்தார். "ஓ! மந்திரி பதவியா? நீங்கள் யார் எனக்குக் கொடுப்பது?" என்று குதர்க்கம் செய்யாமல் சட்டென்று ஒப்புக்கொண்டுவிட்டார்.

மத்திய சர்க்காரிலே டாக்டர் அம்பேத்கர் சட்ட மந்திரி பதவி வகிக்கிறார். ஆகையால் இந்தியாவின் சுதந்திர அரசியலைத் தயாரிக்கும் பொறுப்பு அவருக்கு ஏற்பட்டது. தயாரித்த திட்டத்தை அரசியல் நிர்ணய சபையில் கொண்டு வந்து, பகுதி பகுதியாக விளக்கம் கூறி, ஆட்சேபங்களுக்குச் சமாதானம் சொல்லி, உசிதமான திருத்தங்களை ஏற்றுக்கொண்டு, நிறைவேற்றும் பொறுப்பும் அவருடைய பொறுப்பாக ஏற்பட்டது.

டாக்டர் அம்பேத்கர் சமீபத்திலே ஹிந்து மத-சமூக வாழ்க்கையின் பல புரட்சிகரமான அம்சங்களைப் புகுத்தி, ஹிந்து மத சட்டத் திருத்த மசோதா ஒன்றை இந்திய பார்லிமெண்டில் கொண்டு வந்ததும், அதை எதிர்த்தவர்களுடைய வாதங்களை வெள்ளம் தவிடு பொடியாக்கியதும் எல்லோருக்கும் ஞாபகம் இருக்கும்.

டாக்டர் அம்பேத்கர் சமீபத்தில் கல்யாணம் செய்துகொண்டார். ஏறக்குறைய அறுபது வயதான டாக்டர் அம்பேத்கருக்கும் நாற்பது வயதுள்ள ஒரு பிராமண யுவதிக்கும் சமீபத்தில் விவாகம் நடந்தது. டாக்டர் அம்பேத்கரும் அவருடைய மனைவியும் தீர்க்காயுளுடனும் ஆரோக்கியத்துடனும் வாழ்ந்து பாரத தேசத்துக்குப் பல்லாண்டு தொண்டு புரியட்டும்.

# வெற்றி ஒருவருக்கே !


1 ......ருஷ்ய சர்வாதிகாரி ஸ்டாலின்
யூகோஸ்லாவியா கன்னியைக்
காதலித்தது பயன் படவில்லை.


2 .........
ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ்
அமெரிக்க டாலர் மாதிடம்
தன்னுடைய இருதயத்தைத்
திறந்து காட்டி எத்தனையோ
பிரார்த்தித்தும் வெற்றி
படையவில்லை.
கிரிப்ஸ்


3 .........
இந்தோனேஷியப் பெண் மணி
மிஸ்டர் டச்சு துரைக்கு நன்றாய்ப்
பாடம் கற்பித்து அனுப்பி விட்டார்.


4
சந்திரநாகூர் நங்கையிடம்
குண்டாந் தடியால் அடிபட்டுக்கொண்டு
மிஸ்டர் பிரான்ஸ் மூட்டை கட்டுகிறார்.




5
லா பிரான்ஸின் முடிக்குப் பஞ்சாப்
லேடியிடம் நல்ல உதை கிடைத்தது.
ஐருப் பியாகத் அதிகாரி பார்த்துக்
கண்ணீர் பெருக்கிறார்.






6
ஈ.வே.ரா.
இந்த ஸீஸனில்
காதல் முயற்சியில்
வெற்றியடைந்த
வீரர் ஈரோட்டுப்
பெரியார் ஒருவர்தான்!
SHASTRI

# எதிர்ப்புக் கட்சி வேண்டியதே!

ஐக்கிய மாகாணப் பிரதமர் பண்டித கோவிந்த வல்லப பந்த் சமீபத்தில் ஓரிடத்தில் பேசியபோது தேச நிலைமையைப் பற்றி ஒரு முக்கியமான கருத்தை வெளியிட்டார்.

"காங்கிரஸுக்கு பதிலி கிடையாது. கிடையவே கிடையாது!" என்றார்.

அதாவது, தேசத்தின் அரசியலில் இப்போது காங்கிரஸ் வகிக்கும் ஸ்தானத்தை வகிக்க வேறு ஒரு கட்சி இல்லை என்றார். இந்திய அரசாங்கத்தையும் மாகாண அரசாங்கங்களையும் காங்கிரஸ் கட்சியார் நடத்துவது போல நடத்துவதற்கு வேறு கட்சி ஒன்றும் கிடையாது என்று சொன்னார்.

இதே கருத்தை வேறு விதங்களில் இன்னும் சில தலைவர்களும் சமீபத்தில் வெளியிட்டிருக்கிறார்கள்.

தற்சமயம் காங்கிரஸுக்குப் பதிலி கிடையாது என்பது உண்மைதான். காங்கிரஸிடமிருந்து அரசாங்கப் பொறுப்பைப் பெற்றுக் கொள்ளக் கூடிய தகுதிவாய்ந்த கட்சி தேசத்தில் தற்போது கிடையாது என்பதும் உண்மைதான்.

தற்சமயம் இல்லாத காரணத்தினால் எப்போதுமே இருக்க முடியாது என்று சொல்வதற்கில்லை.

தற்சமயம் காங்கிரஸுக்குப் பதில் இல்லையென்றால் எப்போதுமே ஏற்படாது என்பதில்லை.

எந்த நாளிலும் காங்கிரஸுக்கு எதிர்ப்புக் கட்சியே இருக்கக் கூடாது என்றும் சொல்ல முடியாது.

ஜனநாயக ஆட்சியில் அரசாங்கத்துக்கு எதிர்ப்பு அவசியம் இருக்க வேண்டும். அரசாங்கத்தை நடத்தும் கட்சிக்கு எதிர்க் கட்சி ஒன்று அவசியம் ஏற்பட வேண்டும். அப்போதுதான் சர்க்கார் திட்டங்களும் சர்க்கார் காரியங்களும் சரிவர ஆராய்ச்சி செய்யப்படும். இரு கட்சியாரின் வாதப் பிரதிவாதங்களின் மூலம் குற்றங் குறைகள் வெளியாகிச் சீர்ப்படும்.

எதிர்ப்பே யில்லாத அரசாங்கம் எவ்வளவு நல்ல அரசாங்கமாயிருந்தாலும் கொஞ்ச நாளில் சீர் கெட்டுவிடும். அந் நிலையில் அரசாங்க மந்திரிகள் தான்தோன்றித் தனமாகக் காரியம் செய்வார்கள். பொது மக்களின் ஆட்சேபங்களைப் பொருட்படுத்தாத யதேச்சாதிகாரிகளின் நிலைமைக்குச் சீக்கிரத்தில் வந்து விடுவார்கள்.

•    •    •

எதிர்ப்புக் கட்சி அவசியம் வேண்டும். அந்த எதிர்ப்புக் கட்சி நல்ல முறையில் ஏற்பட வேண்டும். அரசாங்க திட்டங்களிலும் நிர்வாகத்திலும் உள்ள ஊழல்களையும் குறைபாடுகளையும் நேர்மையான முறையில் எடுத்துக் காட்ட வேண்டும். பிறிதொரு காலத்தில் அரசாங்கத்தை ஏற்றுக்கொண்டு நடத்தும் அளவுக்குத் திறமையும் செல்வாக்கும் பெறவேண்டும்.

இந்த அம்சங்கள் எல்லாம் பொருந்தியுள்ள எதிர்ப்புக் கட்சி நம் சென்னை மாகாணத்தைப் பொறுத்தவரையில் எதுவாக இருக்கலாம் என்று யோசித்துப் பார்ப்போம். இப்போதுள்ள அரசியல் கட்சிகளில் எந்தக் கட்சி காங்கிரஸுக்கு உண்மையான எதிர்ப்புக் கட்சியாயிருக்க முடியும் என்று சிந்திப்போம். எந்த மாதிரி எதிர்ப்புக் கட்சியினால் தேசத்துக்கு நன்மை உண்டாகுமென்று ஆராய்வோம்.

•    •    •

சென்னை மாகாணத்தில் காங்கிரஸுக்கு எதிராக முஸ்லிம் லீக் கட்சி, உதிரிக் கட்சி, ஹிந்துமகாசபைக் கட்சி, ஜஸ்டிஸ்—திராவிடக் கட்சி, கம்யூனிஸ்ட் கட்சி, சோஷலிஸ்ட் கட்சி ஆகியவை இருக்கின்றன.

முஸ்லிம் லீக் கட்சிக்குத் தற்சமயம் அர்த்தமே கிடையாது. முஸ்லிம்கள் மதத்தின் பேரால் ஒரு கட்சியை வைத்துக் கொண்டிருக்கும் வரையில் அவர்கள் மிகச் சிறுபான்மையோராகவே இருப்பார்கள். அவர்களுடைய எதிர்ப்புக்குச் சக்தி ஏற்படாது. எந்த நிலைமையிலும் அவர்கள் அரசாங்கப் பொறுப்பை ஏற்க முடியாது.

முஸ்லீம் லீக்கின் பழைய சரித்திரம் அவர்கள் நாட்டில் பொதுவான செல்வாக்குப் பெறுவதற்கு எதிராக இருக்கிறது. இப்போது சென்னைச் சட்ட

சபையில் முஸ்லிம் எம். எல். ஏ.க்கள் சிலர் காங்கிரஸ் மந்திரி சபையின் குற்றங்களை எடுத்துக் காட்டிப் பேசுகிறார்கள். அவர்கள் அப்படிப் பேசுவதால் பொது மக்களின் நியாயமான கோரிக்கைக்குப் பலவீனம் ஏற்படுகிறது! "முஸ்லிம் எம். எல். ஏ.க்கள் இந்த விஷயத்தில் தலையிட்டுப் பேசாமல் இருக்க வேண்டுமே!" என்று பொது மக்கள் பிரார்த்தனை செய்ய வேண்டியதாயிருக்கிறது.

உதிரிக் கட்சி என்பது சென்னைச் சட்டசபைக்குள்ளே மட்டும் உள்ளது. சொந்த செல்வாக்கினால் சட்டசபைக்கு வரும் சில பிரமுகர்களும் செல்வர்களும் அடங்கியது. இவர்களுடைய தொகை மிகச் சொற்பம். பொது ஜனங்களில் மிகச் சிறு பகுதியினரின் பிரதிநிதிகள் இவர்கள். தேசத்தில் இவர்களுக்கு ஆதரவு ஏற்படாது. இவர்களுடைய எதிர்ப்புக்கும் பலம் உண்டாகாது.

ஹிந்து மகா சபைக்குச் சென்னை மாகாணத்தில் இப்போது சிறிதளவும் ஆதரவு இல்லை. இனியும் ஏற்படும் என்று தோன்றவில்லை.

ஜஸ்டிஸ்—திராவிடக் கட்சி முன் கூறிய கட்சிகளைவிடப் பலம் உள்ளது. கட்டுப்பாடுள்ள ஒரு கூட்டத்தார் அதற்கு ஆதரவு தருகின்றனர். ஆனால் அந்தப் பலமும் ஆதரவும் வர வரக் குறைந்து வந்திருக்கின்றன. இனியும் க்ஷீணமடைந்தே தீரும். ஏனெனில் இந்தக் கட்சியின் அஸ்திவாரம் மிக்க பலவீனமானது. ஜாதித் துவேஷத்தை ஆதாரமாகக் கொண்டு எழுந்த கட்சி. ஜாதித் துவேஷத்துக்குக் காரணம் மறையும்போது கட்சியும் அழியும். அந்தக் காரணம் விரைவாகவே மறைந்து கொண்டு வருகிறது. சமீபத்தில் திராவிடக் கட்சியில் ஏற்பட்ட உள் தகராறுகளினால் அக் கட்சி பெரிதும் அபகீர்த்தி அடைந்திருக்கிறது. மறுபடி புத்துயிர் பெற்று எழுவது சுலபமாக இயலாத காரியம். அப்படி எழுந்தாலும் பொதுமக்களின் நீடித்த ஆதரவைப் பெறாது.

பொது உடைமைக் கட்சி பலம் உள்ளது. இந்தக் கட்சியில் சேர்ந்து உழைப்பவர்கள் திட்டமான கொள்கை உடையவர்கள். உயிரையும் தியாகம் செய்யக் கூடியவர்கள். பண்டித ஜவாஹர்லால் அடிக்கடி எடுத்துக் காட்டி வருவது போல் கட்சியின் முடிவான இலட்சியங்கள் பலருக்கும் உகந்தவை. ஆனால் இவர்கள் கடைப்பிடிக்கும் பலாத்கார முறைகள் அனைவருக்கும் வெறுப்பை உண்டுபண்ணி வருகின்றன. அஹிம்சாமூர்த்தியான மகாத்மா வாழ்ந்த நாட்டில் பலாத்கார முறைக்குச் செல்வாக்கு ஏற்படாது. பாவ புண்ணியம் பாராத பயங்கரப் பாதகச் செயல்களுக்கு அநுதாபம் உண்டாகாது. தலைவலி போய்த் திருகுவலி வந்ததற்கொப்ப பிரிட்டிஷ் ஆட்சியை ஓட்டிவிட்டு ருஷிய ஆதிக்கத்துக்கு அடிகோலுவதையும் மக்கள் ஒரு நாளும் விரும்ப மாட்டார்கள்.

கம்யூனிஸ்ட் கட்சியார் இந்தியாவின் நிலைமைக்கேற்பச் சாத்வீக முறைகளைக் கைக்கொண்டிருந்தால் வரும் தேர்தலில் ஒரு கை பார்த்திருக்கலாம். அந்தச் சந்தர்ப்பத்தை இழந்து விட்டார்கள் என்றே சொல்ல வேண்டும்.

* * *

மிஞ்சி நிற்பது சோஷலிஸ்ட் கட்சி ஒன்றுதான் என்பது வெளிப்படை.

காங்கிரஸுக்குச் சரியான எதிர்ப்புக் கட்சி ஆகக் கூடியது சோஷலிஸ்ட் கட்சிதான். நாட்டில் செல்வாக்குப் பெறக்கூடிய கட்சியும் அதுதான்.

சோஷலிஸ்ட் கட்சியின் அநேக இந்தியத் தலைவர்கள் விடுதலைப் போரில் எப்போதும் முன்னணியில் நின்றவர்கள். காங்கிரஸில் வெகு காலம் இருந்து தொண்டு செய்தவர்கள். அறிவும் ஆற்றலும் படைத்தவர்கள்.

அவர்களுடைய காரியங்கள் சில சமயம் அதிகப் பிரசங்கித்தனமாகத் தோன்றுவதுண்டு. ஆனால் அவர்களுடைய தேச பக்தியையோ சுதந்திர ஆர்வத்தையோ யாரும் ஆட்சேபிக்க முடியாது.

சோஷலிஸ்டுகள் ஜனநாயகத்திலும் வோட்டுரிமையிலும் நம்பிக்கை படைத்தவர்கள். வோட்டின் பலத்தினால் அரசாங்கத்தைக் கைப்பற்றி நடத்த விரும்புகிறவர்கள்.

இந்த வருஷ ஆரம்பத்தில் சோஷலிஸ்டு தலைவர்களின் போக்குக்கு ஒப்பற்ற ஓர் உதாரணம் கிடைத்தது. ரயில்வே ஸ்டிரைக்கைப் பற்றிப் பேச்சு நடந்து கொண்டிருந்தபோது இந்தியா முழுவதும் கவலையில் ஆழ்ந்திருந்தது. சோஷலிஸ்ட் தலைவர்கள் மிகவும் கடுமையாகத்தான் பேசிக் கொண்டிருந்தார்கள். ஆயினும் கடைசி நேரத்தில் பொறுப்பை உணர்ந்து காரியம் செய்தார்கள். தேச நன்மையை முன்னிட்டு ரயில்வே ஸ்டிரைக் யோசனையைக் கைவிட்டு விட்டார்கள்.

சோஷலிஸ்டுகள் கடவுள் இல்லையென்று சொல்லும் நாஸ்திகர்கள் அல்ல: ஹிந்து மதத்தைத் துவேஷிப்பவர்கள் அல்ல; ஒழுக்கத்தையும் சன்மார்க்கத்தையும் அசட்டை செய்கிறவர்கள் அல்ல. இந்தியாவின் பழைய பண்பாட்டில் நம்பிக்கை பூரணமாக உடையவர்கள்.

இத்தகைய காரணங்களினால் வருங்காலத்தில் சோஷலிஸ்ட் கட்சிதான் காங்கிரஸுக்குச் சரியான எதிர்ப்புக் கட்சியாகக் கூடும் என்று கருதவேண்டும். வருகிற பொதுத் தேர்தலில் சோஷலிஸ்ட் கட்சியார் சில ஸ்தானங்களைப் பெறலாம். அதற்கடுத்த தேர்தலில் இன்னும் அதிகமான ஸ்தானங்களைப் பெற்று அரசாங்கத்தை நடத்தவும் முன் வரக் கூடும்.

சோஷலிஸ்ட் கட்சியார் பலம் பெறுவதற்கு இரண்டு முக்கியமான சாதனங்கள் இருக்கின்றன.

சோஷலிஸ்ட் கட்சியின் திட்டங்களும், பிரசாரங்களும், நிர்மாண வேலைகளும் அந்தக் கட்சியின் பலத்தை வளர்க்கக் கூடியவை.

காங்கிரஸ் மந்திரி சபைகள் செய்யும் தவறுகள் அந்தக் கட்சி பலம் பெறுவதற்கு இன்னொரு சாதனமாகும்.

* * *

சென்னை மாகாணத்தில் வட நாட்டில் உள்ள சோஷலிஸ்ட் தலைவர்களைப் போன்ற தீரர்கள் இல்லை. ஸ்ரீ ஜயப்பிரகாச் நாராயணன், ஆச்சாரிய நரேந்திர தேவ், ஸ்ரீ அச்சுத பட்டவர்த்தன், டாக்டர் லோஹியா முதலியவர்களைப்போல் தொண்டினாலும் திறமையினாலும் மக்களின் அன்பைக் கவர்ந்தவர்கள் இந்த மாகாணத்தில் இல்லை. ஸ்ரீ சரத்சந்திர போஸைப்போல் புகழ்பெற்ற பிரமுகர்களும் இல்லை.

ஆகையால் தென்னாட்டில் சோஷலிஸ்ட் கட்சி காங்கிரஸுக்குச் சரியான எதிர்ப்புக் கட்சியாவது கொஞ்சம் சிரமமான காரியந்தான். சோஷலிஸ்ட் கட்சி எதிர்ப்புக் கட்சி என்னும் அந்தஸ்தை அடைய வேண்டுமானால், அந்தக் கட்சியில் புது மனிதர்கள் சேர வேண்டும். அறிவும் ஆற்றலும் தொண்டில் ஆர்வமும் உள்ள இளைஞர்கள் சேரவேண்டும்.

சோஷலிஸ்ட் பத்திரிகைகள் சில நடைபெறுகின்றன. இவை காங்கிரஸ் ஸ்தாபனத்தையும் மாபெரும் காங்கிரஸ் தலைவர்களையும் வர்ஜா வர்ஜமின்றித் திட்டுகின்றன. "காங்கிரஸைக் குழிவெட்டிப் புதைப்போம்" என்று சோஷலிஸ்ட் பத்திரிகைகளில் தலைப்புகள் போடப் படுகின்றன! இவையெல்லாம் அக் கட்சியின் பலத்தைக் குறைக்கவே செய்யும். இந்தியா தேசத்துக்குச் சுதந்திரம் பெற்றளித்த புனிதமான ஸ்தாபனத்தை—தாதாபாய் நௌரோஜி முதல் நேரு—நேதாஜி வரையில் கண்ணீர் விட்டு வளர்த்த ஸ்தாபனத்தைக் "குழி தோண்டிப் புதைப்போம்" என்று எழுதக் கூடியவர்கள் பொது மக்களிடையில் எந்த வித ஆதரவைப் பெற முடியும்? இந்த முறையில் பிரசாரம் நடத்தினால் இவர்களுக்கும் கம்யூனிஸ்டுகள்-திராவிடக் கட்சிகளுக்கும் வித்தியாசம் இல்லை என்றுதான் ஏற்படும்.

கௌரவமான முறையில் காங்கிரஸ் சர்க்காரின் வேலைத் திட்டங்களை ஆராய்ந்து குற்றங் குறைகளை நேர்மையான முறையில் எடுத்துக் கூறியும் மாற்றுத் திட்டங்களை வெளியிட்டும் பிரசாரம் நடத்தினால் சோஷலிஸ்ட் கட்சியின் செல்வாக்கு நாட்டில் வளர இடம் உண்டு. அப்படி அதன் செல்வாக்கு வளருவது நாட்டுக்கு நன்மையாகவும் இருக்கும்.

எதிர்ப்புக் கட்சி அவசியம் வேண்டியதுதான். அது பிரிட்டிஷ் தொழிற் கட்சியைப்போல் கௌரவமான எதிர்ப்புக் கட்சியாக ஏற்படவேண்டும்.




## அத்தியாயம் 29

# சீமந்த புத்திரி

**சா**லைக்கு இருபுறத்திலும் குட்டையான ஈச்ச மரங்கள் காடாக மண்டி வளர்ந்திருந்தன. ஒரு பக்கத்தில் செங்குத்தான பாறை ஒன்று இருந்தது. வண்டியை ஓட்டிய பையனிடம் மௌல்வி சாகிபு என்னமோ சொன்னார். பையன் வண்டியைச் சாலையை விட்டுக் காட்டுக்குள் ஓட்டினான். ஈச்ச மரங்களுக்கு மத்தியில் இடம் கிடைத்த வழியாக ஓட்டிச் சென்று பாறைக்குப் பின்புறத்தில் கொண்டுபோய் நிறுத்தினான்.

தந்தையும் மகளும் வண்டியிலிருந்து இறங்கினார்கள். மௌல்வி சாகிபு வண்டியிலிருந்து ஒரு கம்பளத்தை எடுத்துத் தரையில் விரித்தார்.

"அம்மா! இதில் உட்கார்! பகலெல்லாம் நாம் இங்கேதான் கழிக்க வேண்டியிருக்கும்!" என்றார்.

சீதா உட்கார்ந்து, "ஏன், அப்பா? பகலில் பிரயாணம் செய்யக்கூடாதா?" என்று கேட்டாள்.

"பகலில் பிரயாணம் செய்தால் இரண்டு வகையில் ஆபத்து வரலாம். சீக்கியர்களாவது ஹிந்துக்களாவது நம்மைப் பார்த்தால் ஒரு ஹிந்துப் பெண்ணை முஸ்லிம் கிழவன் அடித்துக் கொண்டு போகிறான் என்று எண்ணி என்னைக் கொல்லப் பார்ப்பார்கள். முஸ்லிம்கள் நம்மைப் பார்த்தால் உன்னை என்ன பண்ணுவார்களோ தெரியாது" என்றார்.

இப்படிச் சொல்லிவிட்டு மௌல்வி சாகிபு வண்டியிலிருந்து தண்ணீர்ப் பையையும் ஒரு சிறு பெட்டியையும் எடுத்து வைத்துக்கொண்டு உட்கார்ந்தார். "சீதா! இந்தப் பையில் தண்ணீர் இருக்கிறது. இந்தப் பெட்டியில் கொஞ்சம் பிஸ்கோத் இருக்கிறது. இவற்றைக் கொண்டு எத்தனை நாள் நாம் காலந் தள்ளவேண்டுமோ தெரியாது. இந்தப் பஞ்சாப் நரகத்திலிருந்து என்றைக்கு வெளியில் போகப் போகிறோமோ, அதையும் சொல்வதற்கில்லை!" என்றார்.

"பஞ்சாப்பை நரகம் என்கிறீர்களே? ஒரு வருஷத்துக்கு முன்னால் நான் இங்கே வந்தபோது இது எவ்வளவு நல்ல தேசமாயிருந்தது? ஜனங்கள் ஒருவருக்கொருவர் எவ்வளவு பிரியமாயிருந்தார்கள்? கல்கத்தா பயங்கரத்தைப் பார்த்துவிட்டு நானும் உங்களுடைய மாப்பிள்ளையும்

பஞ்சாப்புக்கு வந்த போது இது சொர்க்க லோகமாக எங்களுக்குத் தோன்றியது. இந்த ஒரு வருஷத்துக்குள் என்ன நேர்ந்து விட்டது?"

"ஒரு வருஷத்துக்குள் ஒன்றும் நேர்ந்து விடவில்லை. ஜனங்கள் பைத்தியமாகி விட்டார்கள்; அவ்வளவு தான். கல்கத்தாவுக்கு நவகாளியில் பழி வாங்கினார்கள். நவகாளிக்குப் பீஹாரில் பழி வாங்கினார்கள். பீஹாருக்கு இப்போது மேற்குப் பஞ்சாபில் பழி வாங்குகிறார்கள். இதன் பலன் என்ன ஆகுமோ, கடவுளுக்குத் தான் தெரியும். இத்தனை பைத்தியங்களுக்கு மத்தியில் அந்த மகான் ஒருவர் இருந்து அன்பு மதத்தைப் போதித்து வருகிறார். அவர் உண்மையில் மகாத்மா தான்!"

"உங்களுக்குக் காந்திஜியிடம் பக்தி உண்டா, அப்பா!"

"செய்யக்கூடிய பாவங்களை யெல்லாம் செய்த பிறகு இப்போது காந்திஜியிடம் பக்தி உண்டாகி யிருக்கிறது. இந்தப் பக்தியினால் என்ன பயன்? உன் தாயாருக்கு ஆதி முதல் மகாத்மா காந்தியிடம் பக்தி உண்டு. 'மகாத்மா தான் தெய்வம்' என்று சொல்லிக் கொண்டிருப்பாள். அப்போதே அவளுடைய பேச்சைக்கேட்டு நடந்திருந்தேனானால் என் வாழ்க்கை இப்படி ஆகியிராது."

"அப்பா! நான் கேட்கிறேனே என்று கோபித்துக்கொள்ளக்கூடாது. ரொம்ப நாளாக என் மனதில் இருந்து உறுத்திக் கொண்டிருக்கும் கேள்வியைத்தான் கேட்கிறேன். அம்மாவிடம் நீங்கள் எப்போதாவது பிரியமாக இருந்ததுண்டா?" என்றாள் சீதா.

"நீ இந்தக் கேள்வியைக் கேட்டதற்காக எனக்கு உன் பேரில் கோபம் இல்லை, சீதா! இந்த மட்டும் கேட்டாயே என்று சந்தோஷப்படுகிறேன். என் மனதில் கிட்டத்தட்ட முப்பது வருஷ காலமாக இருந்து வரும் பாரத்தை இன்று நீக்கிக் கொள்ளப் போகிறேன். யாரிடமாவது சொன்னாலன்றி என் மனத்தின் சுமை தீராது. உன் அக்காவிடம் சொல்லும் தைரியம் எனக்கு ஏற்படவே யில்லை. இந்தப் பழிகாரி ரஸியா பேகமும் அதற்குக் குறுக்கே நின்றாள். நல்ல வேளையாக அவளும் இப்போது இங்கு இல்லை. எல்லாவற்றையும் உன்னிடம் சொல்லி விடப் போகிறேன்! தான் செய்த குற்றங்களைத் தான் பெற்ற பெண்ணிடம் சொல்லுவதென்பது கஷ்டமான காரியந்தான். ஆனாலும், இந்தச் சந்தர்ப்பம் தவறினால் மறுபடியும் கிடைக்குமோ, என்னமோ!"— இந்தப் பூர்வ பீடிகையுடன் மௌல்வி சாகிபு முப்பது வருஷத்துக்கு முந்தைய சம்பவங்களைச் சொல்ல ஆரம்பித்தார். அவை அதிசயமான சம்பவங்கள் தான். அதிசய மில்லாவிட்டால் அவற்றைக் குறித்துச் சொல்லவேண்டிய அவசியமே இராதல்லவா?

• • •

துரைசாமி ராஜம்மாளைக் கலியாணம் செய்து கொண்டு பம்பாயில் புதுக் குடித்தனம் தொடங்கிய சில காலம் அவர்களுடைய வாழ்க்கை இன்ப மயமா யிருந்தது. ஒவ்வொரு நாளும் ஒரு ஆனந்தத் திருநாளா யிருந்தது. இரண்டு வருஷங்களுக்கெல்லாம் ராஜம்மாள் முதல் தடவை கர்ப்பமானாள். தம்பதிகள் களிப்புக் கடலில் மூழ்கித் திளைத்தார்கள்.

வாழ்க்கைச் சக்கரம் ஒருமுறை சுழன்று வந்தது. இன்பக் கிரஹம் பெயர்ந்து துன்பக் கிரஹம் தோன்றியது. 'மூன்று சீட்டு' என்னும் சூதாட்டத்தில் துன்பத்தின் சிறிய வித்து துரைசாமி அறியாமலே விதைக்கப்பட்டு முளைத்து எழுந்தது.

சொற்ப சம்பளக்காரரான துரைசாமி ரங்காட்டத்தில் தோற்ற பணத்தைத் திரும்ப எப்படியாவது எடுத்து விட விரும்பினார். இதற்காகக் கடன் வாங்கிக் கொண்டு குதிரைப் பந்தயத்துக்குப் போனார். ஒரு தடவை போன பிறகு மனதைத் தடுக்க முடியவில்லை. லாபமும் நஷ்டமும் மாறி மாறி வந்து கொண்டிருந்தது. தம்முடைய புத்தி சாமர்த்தியத்தால் இழந்த பணத்தையெல்லாம் எடுத்து மேலும் லாபமும் சம்பாதித்து விடலாம் என்றும் ஒரு நல்ல தொகை கிடைத்தும் பந்தயத்தை விட்டொழித்து விடலாம் என்றும் எண்ணினார். ஏதோ பொய்க் காரணங்களைச் சொல்லி ராஜம்மாள் அணிந்திருந்த சில நகைகளையும் வாங்கிக்கொண்டு

போய் அடகு வைத்துப் பணம் கடன் வாங்கினார். மேலும் மேலும் சேற்றில் அமுங்கிக் கொண்டிருந்தார். கடைசியில் அடியோடு அமுங்கிப் போக வேண்டியதுதான் என்ற நிலைமை ஏற்பட்டிருந்த சமயத்தில் ராஜம்மாளின் பிரசவ காலமும் நெருங்கியிருந்தது. வீட்டில் வசதியில்லாமல் ஆஸ்பத்திரியில் கொண்டு விட்டார். வண்டி வைத்து ஆஸ்பத்திரியில் கொண்டு விடுவதற்குக் கூடக் கையில் பணம் இல்லாமலிருந்தது. இந்த நிலைமையை நினைத்து மனம் புழுங்கிக் கொண்டே ரயில்வே ஸ்டேஷனில் வேலை பார்த்துக் கொண்டிருந்த போதுதான் ரமாமணி பாய் தன் சகோதரியுடன் வந்து சேர்ந்தாள். அவளுடைய கண்களில் துளித்திருந்த கண்ணீரும் அவள் தன் தங்கையைப் பற்றிச் சொன்ன வரலாறும் துரைசாமியின் உள்ளத்தை இளக்கி விட்டது. அதோடு அவர்களுக்கு உதவி செய்வதால் தன்னுடைய தரித்திரம் தீரலாம் என்ற ஆசையும் கூடச் சேர்ந்து கொண்டது. தன் மனைவியைப் பிரசவத்துக்காக விட்டிருந்த அதே பிரசவ ஆஸ்பத்திரியில் கொண்டு போய்க் கங்கா பாயையும் சேர்த்தார்.

துரைசாமி பிரசவ ஆஸ்பத்திரிக்குத் தமது மனைவியைப் பார்ப்பதற்காகப் போனபோதெல்லாம் ரமாமணி பாயையும் பார்க்கும்படி நேர்ந்தது. வறுமை வலையில் சிக்கியிருந்த அம்மனிதர் மீது ரமாமணி பாய் தன் மோக வலையையும் விரித்தாள். துரைசாமியின் மனம் தத்தளித்தது. நல்லபடியாகத் தன் மனைவிக்குப் பிரசவம் ஆகி வீடு திரும்பிய பிறகு வேலையை ராஜிநாமா செய்து விட்டு ஊருக்கே திரும்பிப் போய் விடுவது என்று ஒரு சமயம் எண்ணுவார். அடுத்த நிமிஷம் அவருடைய மன உறுதி பறந்துபோய் விடும். ரமாமணியுடன் காதல் வாழ்க்கை நடத்துவது பற்றி அவருடைய உள்ளம் ஆகாசக் கோட்டைகள் கட்டத் தொடங்கிவிடும். ஒரு வேளை ராஜம்மாள் பிரசவத்தின் போது இறந்து போய் விட்டால் ரமாமணியைத் தான் கலியாணம் செய்து கொண்டு ஏன் சுகமாயிருக்கக் கூடாது என்னும் படுபாதக எண்ணங்கூடத் துரைசாமியின் மனதில் ஒவ்வொரு சமயம் எழுந்து அவரையே திடுக்கிடச் செய்யும்.

ராஜம்மாளும் கங்கா பாயும் ஒரே நாள் இரவில் குழந்தை பெற்றெடுத்தார்கள். அன்றிரவு துரைசாமிக்கு ஸ்டேஷனில் 'டியூடி' இருந்தது. ஆகையால் ஆஸ்பத்திரிக்குப் போக முடியவில்லை. இராத்திரி ஒரு தடவை டெலிபோன் பண்ணி விசாரித்தார். ராஜம்மாளுக்குச் சுகப் பிரசவம் ஆனதாகவும் பெண் குழந்தை பிறந்திருப்பதாகவும் பதில் வந்தது. காலையில் 'டியூடி' முடிந்ததும் துரைசாமி பரபரப்புடன் மருத்துவ சாலைக்குப் போனார். நர்ஸின் அனுமதி பெற்று ராஜம்மாளைப் போய்ப் பார்த்தார். அளவில்லா வேதனையும் வலியும் அநுபவித்துச் சோர்ந்து போயிருந்த ராஜம்மாளின் முகத்தில் புன்னகை மலர்ந்து பெருமிதம் குடிகொண்டிருந்தது. "நான் சொன்னதுதான் பலித்தது!" என்றாள் ராஜம்மாள். "எதைச் சொல்கிறாய்?" என்றார் துரைசாமி. "ஆண் குழந்தை பிறக்கும் என்று சொன்னதுதான்!" என்றாள் ராஜம்மாள். "என் வாக்குப் பொய்யாகுமா? பாரத்வாஜ மகரிஷியின் வம்சத்தில் பிறந்தவளாயிற்றே நான்!" என்றார் துரைசாமி. "பொய்யாகி விட்டதே!" என்றாள் ராஜம்மாள். "முழுப் பூசணிக் காயைச் சோற்றில் மறைக்கலாம்! பெண்ணை ஆணாக்க முடியுமா?" என்றார் துரைசாமி. ராஜம்மாள் பரிகாசத்துக்காகவே அவ்விதம் பிடிவாதமாய்ச் சொல்கிறாள் என்று அவர் நம்பினார். "நீங்கள் வேணுமானால் பாருங்களேன்!" என்றாள் ராஜம்மாள். துரைசாமி கொசு வலை மூடியைத் தூக்கிவிட்டுக் குழந்தையைப் பார்த்தார். ஆண் குழந்தை என்பதைக் கண்டு சிறிது திடுக்கிட்டார். இராத்திரி டெலிபோனில் செய்தி சொன்னவர்கள் தவறாகச் சொல்லியிருக்க வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டார். ராஜம்மாளின் ஜோசியம் பலித்ததில் தனக்கும் சந்தோஷம்தான் என்று சொல்லி ஒருவாறு சமாளித்துக் கொண்டார்.

ஆயினும் அவருடைய மனம் பூரண நிம்மதி யடையவில்லை. உருவமில்லாத சந்தேகங்கள் தோன்றித் தொல்லை

கொடுத்தன. நர்ஸைத் தனியாகச் சந்தித்து, "டெலிபோனில் பெண் குழந்தை என்று ஏன் சொன்னாய்?" என்று கேட்டார். நர்ஸ் அவரை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, "நான் சொல்லவில்லை. வேறு யாரும் சொல்லியிருக்கவும் மாட்டார்கள். உங்களுக்கு ஏதோ பிரமை!" என்றாள். மறுபடியும் வற்புறுத்திக் கேட்ட போது "ஒருவேளை கங்கா பாயைப் பற்றி விசாரிக்கிறீர்கள் என்று எண்ணிக் கொண்டு யாராவது சொல்லியிருக்கலாம்" என்றாள். "கங்காபாய்க்கும் பிரசவம் ஆகி விட்டதா?" என்று துரைசாமி கேட்டதற்கு, "ஆமாம்; பெண் பிறந்திருக்கிறது!" என்றாள் நர்ஸ். உடனே துரைசாமி ரமாமணியைப் போய்ப் பார்த்து அந்தச் செய்தியை உறுதிப் படுத்திக் கொண்டார். இத்துடன் ஒருவாறு அவர் மனம் ஆறுதல் அடைந்தது.

கங்காபாயையும் அவரே ஆஸ்பத்திரியில் சேர்த்தபடியால் அவளுடைய பெண் குழந்தையைப் பற்றித் தமக்குத் தெரியப்படுத்தியது இயற்கையே என்று தோன்றியது.

ராஜம்மாளையும் குழந்தையையும் துரைசாமி வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போனார். சில காலத்துக்கெல்லாம் அந்தக் குழந்தை இறந்து விட்டது. ராஜம்மாளுக்கும் துரைசாமிக்கும் இதனால் ஏற்பட்ட துன்பத்துக்கு அளவேயில்லை.

தன்னுடைய குழந்தை இறந்த துயரத்தை மறப்பதற்காகத் துரைசாமி கங்காபாயின் குழந்தையை அடிக்கடி போய்ப் பார்த்து வந்தார். கங்காபாய் இறந்து போய்விட்டாள். அவளுடைய குழந்தையை ரமாமணி பாய் வளர்த்து வந்தாள். துரைசாமி ஏற்படுத்திக் கொடுத்த ஜாகையில் தான் அவள் வசித்தாள். ஒரு நாள் ரமாமணியின் ஜாகைக்குத் துரைசாமி போனபோது உள்ளே யாருடனோ அவள் பேசிக் கொண்டிருந்தது காதில் விழுந்தது. அந்தப் பேச்சில் தன்னுடைய பெயர் அடிபடவே துரைசாமி கவனமாகக் கேட்டார். அதிலிருந்து ஒரு விபரீதமான மோசடி வேலையைப் பற்றி அறிந்து கொண்டார். பிரசவங்கள் நிகழ்ந்த அன்று இரவில் ராஜம்மாளின் குழந்தை கங்காபாயின் குழந்தையாகவும் கங்காபாயின் குழந்தை ராஜம்மாளின் குழந்தையாகவும் மாற்றப்பட்டன என்று தெரிந்து கொண்டார். உடனே கதவை இடித்துத் திறந்து கொண்டு போய் நர்ஸையும் ரமாமணியையும் சண்டை பிடிக்க வேண்டும் என்று முதலில் தோன்றியது. அப்புறம் அதனால் என்ன பலன்கள் நிகழுமோ என்ற சந்தேகம் ஏற்பட்டது. மனக் குழப்பம் மாறிய பிறகு நன்றாக யோசித்துத் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று தீர்மானித்தார். நர்ஸ் வெளியில் போகும்போது அவளுடைய கண்ணில் படாமல் மறைந்திருந்துவிட்டுப் பிறகு அறைக்குள் போனார். ரமாமணியைப் பார்த்ததும் அவருடைய பொறுமையெல்லாம் பறந்துவிட்டது. அவளைத் திட்டிச் சண்டை பிடித்தார். ரமாமணி 'ஓ'வென்று அழுது விட்டாள். ஒரு கத்தியை எடுத்து நீட்டி "இதனால் என்னைக் குத்திக் கொன்று விட்டு இந்தக் குழந்தையை எடுத்துக் கொண்டு போங்கள்!" என்றாள். "என் தங்கைமேல் என் அன்பையெல்லாம் வைத்திருந்தேன். அவளும் போய்விட்டாள். இந்தக் குழந்தையின் முகத்தைப் பார்த்துக்கொண்டு உயிர் வாழலாம் என்று எண்ணியிருந்தேன். குழந்தையை நீங்கள் எடுத்துக் கொண்டு போனால் எனக்கு அப்புறம் இந்த உலகத்தில் வேலை ஒன்றுமில்லை" என்று கதறினாள். மொத்த முடிவில் தன் காரியத்தைச் சாதித்துக்கொண்டாள். அதாவது "குழந்தையை எடுத்துக் கொண்டு போவதில்லை" என்று துரைசாமியிடம் அவள் வாக்குறுதி பெற்றுக் கொண்டாள்.

குழந்தைகளை மாற்றும் காரியத்தை எதற்காகச் செய்தாள் என்று துரைசாமி விசாரித்துத் தெரிந்துகொண்டார். தன் தங்கைக்கு ஆண் குழந்தை பிறந்தால் ரஜனிபூர் ராஜ்யத்துக்கு அந்தக் குழந்தை வாரிசு ஆகும் என்று ரமாமணிபாய் நம்பினாள். அக்காரணத்தாலேயே ரஜனிபூர் ராஜாவின் துர்மந்திரிகள் குழந்தையைக் கண்டுபிடித்துக் கொன்றுவிடுவார்கள் என்று பயந்தாள். குழந்தை வேறிடத்தில் வளர்ந்தால் அந்த அபா




யம் இல்லை என்றும், பின்னால் தக்க சமயத்தில் வெளிப்படுத்திக் கொள்ளலாம் என்றும் நினைத்தாள். ஆனால் கங்காபாய் இறந்து போவாள், அவளுடைய குழந்தையும் செத்துப் போய் விடும் என்று ரமாமணிபாய் எதிர்பார்க்கவில்லை. அதைக் காட்டிலும் முக்கியமாக, மாற்றி எடுத்து வந்து வளர்த்த ராஜம்மாளின் குழந்தை தன்னுடைய உள்ளத்தை இவ்வளவு தூரம் கவர்ந்துவிடும் என்று அவள் சிறிதும் எதிர்பார்க்கவில்லை.

எல்லா விஷயங்களையும் யோசித்துப் பார்த்தபோது துரைசாமிக்கும் குழந்தையை ரமாமணியிடம் அப்போதைக்கு விட்டு வைப்பதே நலம் என்று தோன்றியது. இந்தக் குழந்தையை எடுத்துக் கொண்டு போய் ராஜம்மாளிடம் "இதுதான் உன் குழந்தை!" என்று சொன்னால் ராஜம்மாள் நம்ப வேண்டுமே? ஏற்கெனவே அவன் கொஞ்சம் சந்தேகப் பிரகிருதி. இதைப் பற்றி ஏதாவது விபரீதமான சந்தேகம் அவன் மனதில் தோன்றி விட்டால்? துரைசாமிக்கு வேறொரு காதலியிடம் பிறந்த குழந்தை என்று அவன் எண்ணிவிட்டால் என்ன செய்வது? வாழ்க்கையே நாசமாகி விடுமே?—இம்மாதிரி மனக் குழப்பத்துடன் துரைசாமி வீடு திரும்பினார். "பம்பாயில் எத்தனையோ லட்சம் ஜனங்கள் இருக்கிறார்களே? இந்த மாதிரி ஒரு ஆச்சரியமான, விபரீதமான அநுபவம் என் வாழ்க்கையிலே தானா ஏற்படவேண்டும்?" என்று எண்ணிக்கொண்டே சென்றார். அந்த ஒரு ஆச்சரியமான—விபரீத சம்பவம் மேலும் பல ஆச்சரிய—விபரீதங்கள் ஏற்படுவதற்குக் காரணமா யிருந்தது.

ரமாமணியிடம் வளர்ந்து வந்த தன் குழந்தையிடம் துரைசாமியின் பாசம் நாளுக்கு நாள் வளர்ந்து வந்தது. அதன் காரணமாகவே துரைசாமி ரமாமணிபாயிடம் நீடித்த தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டி யிருந்தது. அவள் இழுத்த இழுப்புக்கெல்லாம் ஆளாக வேண்டி யிருந்தது. தன்னுடைய போக்கு வரவுகளைப் பற்றித் தன் மனைவி ராஜம்மாளிடம் பொய் சொல்லி மறைக்க வேண்டியதா யிருந்தது. அதனால் அந்தப் பேதைக்கு எல்லையற்ற மனத் துன்பத்தையும் அளிக்க வேண்டி ஏற்பட்டது.

* * *

“சீதா! ராஜம்மாளுக்குப் பிறந்து ரமாமணியிடம் வளர்ந்த அந்தப் பெண்ணின் பெயர்தான் தாரிணி. அவள்தான் என்னுடைய சீமந்த புத்திரி. நீ அவளுடைய தங்கை. நீங்கள் இரண்டு பேரும் குழந்தைகளா யிருந்தபோது நான் பட்ட சங்கடத்தை உன்னால் கற்பனை செய்துகூட அறிய முடியாது. உலகத்தில் யாரும் அத்தகைய சங்கடத்தை அநுபவித்திருக்க மாட்டார்கள். முற்காலங்களில் கொடுமையான அரசர்கள் ஒரு விதத் தண்டனை அளிப்பார்களாம். ஒரு மனிதனை நடுவில் நிறுத்தி இரண்டு பக்கமும் இரண்டு யானையை நிறுத்தி வலது கையை ஒரு யானையும் இடது கையை ஒரு யானையும் பிடித்து இழுக்கும்படி செய்வார்களாம். அதே மாதிரியாக ஒரு பக்கத்தில் தாரிணியின்மேல் உள்ள பாசமும் இன்னொரு பக்கத்தில் உன்மேல் உள்ள பாசமும் என்னைப்பற்றி இழுத்துக் கொண்டிருந்தன. நடுவில் அகப்பட்டுக் கொண்டு நான் திண்டாடினேன்! ஆனால் அந்தத் திண்டாட்டத்திலெல்லாம் ஒரு சந்தோஷமும் இருந்தது!” என்றார் மௌல்வி சாகிபு.

சீதாவுக்குத் தன்னுடைய வாழ்க்கையில் அதுவரையில் அர்த்தமாகா திருந்த பல விஷயங்கள் அப்போது விளங்கின. மர்மமா யிருந்த பல சம்பவங்கள் தெளிவு பெற்றன. தாரிணியென்று தன்னை எண்ணிக் கொண்டு ரஜனிபூர் ஆட்கள் கொண்டு போனதற்குக் காரணம் தெரிந்தது. அதைக் காட்டிலும் முக்கியமாக, ராஜம்பேட்டையில் சௌந்தர ராகவன் தன்னை முதன் முதல் பார்த்ததும் அன்பு கொண்டதின் காரணம் விளங்கிற்று. தாரிணியின் சாயலைத் தன்னிடம் கண்டதுதான் அதற்குக் காரணமா யிருக்க வேண்டும்; சந்தேகமில்லை. தாரிணி தன்னிடம் அவ்வளவு அன்பா யிருந்ததின் காரணமும் சீதாவுக்கு அப்போது நன்கு புலனாயிற்று. ஒரு தாயின் வயிற்றில் பிறந்த இரத்த பாசந்தான்; சந்தேகம் என்ன? தன்னுடைய மனதிலும் தாரிணியிடம் வாஞ்சை பொங்கிக் கொண்டுதான் இருந்தது; ஆனால், பாழும் அசூயையும் பொறாமையும் அடிக்கடி அந்த வாஞ்சையை அமுக்கிக் கொண்டு மேலெழுந்தன. அடாடா! என்ன கீழான மனது தன்னுடைய மனது! தாரிணியின் தயாள குணம் என்ன? விசால இருதயம் என்ன? தன்னுடைய ஈருஷை நிறைந்த சின்ன மனது என்ன? கடவுள் புண்ணியத்தில் இந்த இக்கட்டிலிருந்து தப்பி மறுபடியும் அந்தப் புண்ணியவதியைப் பார்க்கும் பாக்கியம் தனக்குக் கொடுத்து வைத்திருந்தால்?......

“அப்பா! தாரிணி அக்காவுக்கு இந்த விஷயமெல்லாம் தெரியுமா?” என்று கேட்டாள்.

“இந்த விஷய மெல்லாம் என்று எதைப் பற்றிக் கேட்கிறாய்? நான் இப்போது சொன்னவற்றில் சிலது தெரியும்; சிலது தெரியாது.”

“நான் அவள் கூடப் பிறந்த தங்கை என்று தெரியுமா?”

“தெரியாது! என்னுடைய நெஞ்சு மிகவும் கோழை நெஞ்சு, சீதா! பல தடவை அவளிடம் சொல்ல வேண்டும் என்று எண்ணி எண்ணிக் கடைசியில் தைரியம் வராமல் விட்டு விட்டேன். ரஸியா பேகமும் அவளிடம் சொல்லக் கூடாது என்று மிகவும் பிடிவாதம் பிடித்தாள்.”

“எதற்காக, அப்பா? இது விஷயத்தில் சித்திக்கு என்ன ஆட்சேபணை?”

“பைத்தியக்காரத்தனந்தான்! உண்மையைச் சொல்லி விட்டால் அவள் பேரில் தாரிணிக்குப் பாசம் இல்லாமல் போய்விடும் என்று பயம். அது மட்டுமல்ல; ரஜனிபூர் ராஜ்யத்தில் ஒரு பாதியாவது தாரிணிக்கு வாங்கிக்

கொடுத்துவிட வேண்டும் என்ற சபலம் உன் சித்தியின் மனதிலிருந்து இன்னும் போகவில்லை. உலகம் தலைகீழாகப் போகிறது என்பதையும் சுதேச ராஜ்யங்கள் எல்லாம் இன்னும் சில காலத்தில் இருந்த இடந் தெரியாமல் போய்விடும் என்பதையும் அவள் உணரவில்லை!"

சீதா சிறிது நேரம் யோசித்துக் கொண்டிருந்த பிறகு, "அப்பா! உங்களுக்கு என் பேரில் அதிக பிரியமா? தாரிணி அக்கா பேரில் அதிக பிரியமா!" என்று கேட்டாள்.

மௌல்வி சாகிபு சிரித்துக்கொண்டே "இது என்ன கேள்வி? இரண்டு பேரிடத்திலும் எனக்குச் சமமான பிரியந்தான்!" என்றார்.

"அப்படியானால் எனக்குக் கலியாணம் ஆன பிறகு வெகு காலம் வரை என்னை வந்து பார்க்காமலேயே இருந்து விட்டீர்களே, ஏன்?"

மௌல்வி சாகிபு தயங்கினார். "உண்மையைச் சொல்ல வேண்டும் என்கிறாயா?" என்று கேட்டார்.

"உங்கள் இஷ்டம்! சொல்லலாம் என்றால் சொல்லுங்கள்!" என்றாள்.

"உண்மையைச் சொல்ல வேண்டியதுதான், சீதா! இப்போது சொல்லாவிட்டால் பிறகு சந்தர்ப்பம் வருமோ என்னமோ யார் கண்டது? நம்முடைய மனதின் ஆழத்தில் உள்ளதை நம்மாலேயே கண்டு பிடிக்க முடியாது என்று மனோதத்துவ சாஸ்திரிகள் சொல்கிறார்கள். எனக்கு உன்பேரில் அதிக பிரியமா, தாரிணியின் பேரில் அதிக பிரியமா என்று கேட்டாயல்லவா? சில சமயம் உன் பேரில் எனக்கு அதிக பிரியமாயிருக்கும். வேறு சில சமயம் தாரிணியிடம் அதிக பிரியம் போலத் தோன்றும். உனக்குக் கலியாணம் ஆன புதிதில் உன் பேரில் எனக்குக் கோபமாகவே யிருந்தது. உன் தமக்கை இஷ்டப்பட்டுக் கலியாணம் செய்து கொள்ள விரும்பிய புருஷனை நீ கலியாணம் செய்து கொண்டாய். தாரிணிக்கு நீ பெரிய துரோகம் செய்து விட்டதாக நினைத்தேன். ஆனால் உண்மையில் நீ அவளுக்குப் பெரிய உபகாரம் செய்திருக்கிறாய் என்று பின்னால் தெரிந்து கொண்டேன். அம்மா! சௌந்தரராகவனைக் கலியாணம் செய்து கொண்டு நீ பட்ட கஷ்டங்களை நினைத்து நினைத்து நான் எத்தனையோ நாள் கண்ணீர் வடித்திருக்கிறேன். இவ்வளவு கஷ்டங்களையும் தாரிணி பட்டிருக்க வேண்டியவள் தானே? நீ அந்த தூர்த்தனைக் கலியாணம் செய்து கொண்டதனால் தாரிணிக்கு எவ்வளவு பெரிய உபகாரம் செய்திருக்கிறாய்!" என்றார் மௌல்வி சாகிபு.

"அப்பா! இவரைப் பற்றி நீங்கள் ஒன்றும் அவதூறாகப் பேசவேண்டாம். என்னால் பொறுக்க முடியாது!" என்றாள் சீதா.

"இல்லை, பேசவில்லை. மன்னித்துக் கொள்!" என்றார் மௌல்வி.

"நீங்கள் சற்று முன் கூறியது உண்மையும் இல்லை. அக்கா இவரைக் கலியாணம் செய்து கொண்டிருந்தால் என்னைப்போல் கஷ்டப் பட்டிருக்க மாட்டாள். இரண்டு பேரும் எவ்வளவோ சந்தோஷமாக வாழ்க்கை நடத்தி யிருப்பார்கள். இந்தத் துக்கிரி,—அதிர்ஷ்டமற்ற பாவி,—அவர்களுடைய வாழ்க்கையில் குறுக்கிட்டு நாசமாக்கினேன்!"

"அப்படிச் சொல்லாதே, சீதா! இந்த உலகில் எல்லாம் அவரவர்களுடைய தலைவிதியின்படி நடக்கிறது. ஒருவர் வாழ்க்கையை இன்னொருவர் நாசமாக்க முடியாது."

"தலைவிதியில் எனக்கு நம்பிக்கையில்லை, அப்பா! தலைவிதியும் இல்லை, கால் விதியும் இல்லை. எல்லாம் நம்முடைய கர்மத்தின் பயன்தான். அக்காவுக்கு நான் முதலில் துரோகம் செய்தேன்; பிறகு என் அருமைத் தோழி லலிதாவுக்குத் துரோகம் செய்தேன். அதற்கெல்லாம் பிராயச்சித்தம் நான் செய்து கொள்ளாவிட்டால் எனக்கு நல்ல கதி எப்படிக் கிடைக்கும்?"

"நீ மனதறிந்து ஒரு குற்றமும் செய்யவில்லை, சீதா! எல்லாம் விதி வசமாக நேர்ந்ததுதான். வீணாக மனதை அலட்டிக் கொள்ளாதே!"

"அப்பா! எனக்கு நீங்கள் ஒரு வரம் கொடுக்க வேண்டும்."

"நான் என்ன கடவுளா, உனக்கு வரம் கொடுப்பதற்கு?"

"கடவுளைப் போலத்தான் வந்திருக்கிறீர்கள். 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' அல்லவா? அன்னை போய்விட்டாள். நீங்கள்தான் எனக்குப் பாக்கியிருக்கும் கடவுள். இந்தப் பிரயாணத்தில் எனக்கு ஏதாவது நேர்ந்து விட்டால், ஏதாவது ஆபத்து ஏற்பட்டு நான் இறந்துவிட்டால், நீங்கள் கட்டாயம் தாரிணி அக்காவைப் பார்த்து நான் சொல்லும் செய்தியைச் சொல்ல வேண்டும். நான் அக்காவுக்குச் செய்த துரோகத்துக்காக மனப்பூர்வமாய் மன்னிப்புக் கேட்டுக் கொண்டதாகச் சொல்ல வேண்டும்!......"

"இது என்ன பேச்சு?"

"ஒருவேளை நான் வழியில் இறந்து போய்விட்டால் நீங்கள் எப்படியாவது தாரிணி அக்காவைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். இவருடைய மனதிலிருந்து இன்னும் அக்காவின் ஞாபகம் போகவில்லை என்றும், இவரை அக்கா கட்டாயம் கலியாணம் செய்து கொண்டே தீரவேண்டும் என்றும் சொல்ல வேண்டும். நான் இறந்த பிறகு தாரிணி அக்காவும் இவரும் கலியாணம் செய்து கொண்டு சந்தோஷமாயிருந்தால்தான் என் ஆத்மா சாந்தமடையும்!"

"இது என்ன பைத்தியம்! என்னுடைய தவறுதான். உன்னிடம் நான் ஒன்றுமே சொல்லியிருக்கக் கூடாது."

"அப்பா! நான் இப்போது சொன்னதை நீங்கள் தாரிணி அக்காவிடம் சொல்வதாக வாக்களித்தால்தான் நான் இங்கிருந்து புறப்படுவேன். இல்லாவிட்டால் வரமாட்டேன்."

"உன் இஷ்டப்படியே வாக்களிக்கிறேன், அம்மா! ஆனால் அதற்கு அவசியம் ஏற்படப் போவதில்லை."

"எதற்கு?"

"தாரிணியிடம் நான் செய்தி சொல்வதற்கு. நீயும் டில்லி போகும் வரையில் காத்திருக்க வேண்டியதில்லை. வழியிலேயே நாம் உன் தமக்கையைப் பார்ப்போம். அப்போது நேரில் நீயே சொல்லிவிடலாம்."

"வழியில் பார்ப்போம் என்று எதைக்கொண்டு சொல்லுகிறீர்கள்?"

"எனக்கு ஜோசியம் தெரியும், இப்போது உனக்கு ஒரு உதாரணம் சொல்லி நிரூபிக்கிறேன், பார்! நம்முடைய வண்டியை ஓட்டிக்கொண்டு வந்த பையன் இருக்கிறான் அல்லவா?"

"ஆமாம்; அவனுக்கு என்ன?"

"அதோ பாடுகிறான், கேள்! என்ன பாடுகிறான் என்று தெரிகிறதா?"

சற்றுத் தூரத்திலிருந்து 'சல் சல் நவ் ஜவான்!' என்ற டாக்கிப் பாட்டு இலேசாகக் கேட்டுக்கொண்டிருந்தது. பையன் பாறை மறைவில் உட்கார்ந்து பாடிக் கொண்டிருந்தான்.

"பையன் ஏதோ பழைய பாட்டை முணு முணுக்கிறது கேட்கிறது! அதனால் என்ன?"

"அந்தப் பையன் நம்மை ஏமாற்றி விட்டு ஓடிவிட உத்தேசித்திருக்கிறான். கொஞ்சம் கவனித்துக்கொண்டிரு."

இரண்டு நிமிஷத்துக்குப் பிறகு கோவேறு கழுதையை வண்டியிலே பூட்டும் சத்தம் கேட்டது.

"நீங்கள் சொல்வது உண்மைதான். வண்டியைப் பூட்டிக்கொண்டு பையன் ஓடிவிடப் பார்க்கிறான் போலிருக்கிறது. அப்புறம் நம்முடைய கதி என்ன ஆகிறது?"

"கவலைப்படாதே, சீதா! அவனுடைய நோக்கம் நிறைவேறாது!"

"அது எப்படிச் சொல்கிறீர்கள்?"

"ஜோசியந்தான் சொல்கிறேன். பார்த்துக் கொண்டே இரு!"

சில நிமிஷத்துக்கெல்லாம் வண்டிச் சக்கரம் உருளும் சத்தம் கேட்டது. வண்டியும் கோவேறு கழுதையும் அதை ஓட்டிய பையனும் கண்ணுக்குத் தென்பட்டார்கள்.

மௌல்வி சாகிபு சட்டென்று தன் மடியிலிருந்த கைத் துப்பாக்கியை எடுத்துச் சுட்டார். 'டுமீர்' என்ற சத்தத்துடன் குண்டு பாய்ந்தது.

சீதாவின் காதில் இலேசாக அலை ஓசை கேட்டது. அது "மரணமே! வா!" "மரணமே! வா!" என்று சீதாவின் காதில் ஒலித்தது.

# நெல்லைச் செய்தி

சமீபத்தில் திருநெல்வேலியிலிருந்து வந்த நண்பர் ஒருவரைச் சந்தித்தோம்.

"என்ன சேதி? திருநெல்வேலி ஜில்லாவிலே ஏதாவது முக்கியமான விசேஷம் உண்டா?" என்று கேட்டோம்.

அவர் ஒரு முறை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, "உண்மைதானா? உங்களுக்குத் தெரியாதா?" என்று கேட்டார்.

"என்ன?" என்று கேட்டோம்.

"காது சரியாகக் கேட்கிறதல்லவா?"

"கேட்கிறது, ஐயா!"

"கொஞ்சம் எனக்குச் சந்தேகமாகத்தான் இருக்கிறது. உங்களுக்குக் காது சரியாக இருந்தால் எங்கள் சோமயாஜுலு ஆரம்பித்திருக்கும் நெல்லைச் செய்தியின் முழக்கம் காதில் விழுந்திருக்கவேண்டுமே!" என்றார்.

"நெல்லைச் செய்தியா? — அப்படியா செய்தி?" என்று கேட்டோம் வியப்புடன்.

தமிழ்நாட்டில் தேசபக்தர் ஸ்ரீ சோமயாஜுலுவைத் தெரியாதவர்கள் யாருமே இருக்க மாட்டார்கள். ஸ்ரீ சோமயாஜுலுவைப்போன்ற தேசபக்த வீரர்கள் அடிமை நாட்டை விடுதலை செய்வதற்காகவென்றே ஜனனம் எடுத்தவர்கள் என்று சொல்லலாம். 1947-ம் வருஷம் ஆகஸ்ட் மாதம் 15-ம் தேதி பாரத தேசத்துக்குச் சுதந்திரம் வந்ததும் முதல் முதலாக ஸ்ரீ சோமயாஜுலுவின் ஞாபகம்தான் பாண்டிய நாட்டில் எல்லோருக்கும் வந்திருக்கும். "தேசத்துக்குத்தான் சுதந்திரம் வந்து விட்டதே! இனிமேல் வீரர் சோமயாஜுலுவின் பாரத தோள்களுக்கு வேலை என்ன இருக்கிறது? அவர் இனி என்ன செய்யப் போகிறார்?" என்று நினைத்திருப்பார்கள்.

ஸ்ரீ சோமயாஜுலு என்ன செய்யப் போகிறார் என்பது இப்போது தெரிந்து விட்டது. தேசபக்தர் சோமயாஜுலு இப்போது பத்திராதிபர் சோமயாஜுலு ஆகிவிட்டார். இதுவரையில் பொது மேடையில் சிங்கமெனக் கர்ஜித்து தேசத்துக்குத் தொண்டாற்றி வந்த ஸ்ரீ சோமயாஜுலு, இப்போது பேனா முனையிலும் தேச சேவை செய்யப் போவது தமிழ் மக்களின் அதிர்ஷ்டமாகும்.

திருநெல்வேலி ஜில்லாவில் நடக்கும் முக்கிய நிகழ்ச்சிகளைத் தவிர, விகடம் முதலிய பிற அம்சங்களும் "நெல்லைச் செய்தி"யில் இடம் பெற்றிருக்கின்றன. தலையங்கங்கள் தேசத்தின் அரசியல் நிலைமையைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. "சைனாவில் கோ-மின்-டாங் போன வழியிலே இந்தியாவின் காங்கிரஸ் மகா சபையும் போகப் போகிறதா?" என்று நெல்லைச் செய்தியின் இரண்டாம் இதழ்த் தலையங்கம் கேட்டிருக்கிறது. ஸ்ரீ சோமயாஜுலு அவர்களின் பத்திரிகை விரைவில் நெல்லை ஜில்லாவின் சுதந்திர இடிமுழக்கக் குரலாக விளங்கும் என்பதில் சந்தேகம் இல்லை. வருஷ சந்தா ரூ. 6; தனிப்பிரதி விலை அணா 2. விலாசம்:—"நெல்லைச் செய்தி" 41, சுவாமி சன்னதித் தெரு, திருநெல்வேலி டவுன்.



வீட்டுக்காரர்:—என்ன நட்டுவனார்! எங்கே இப்படிச் சாவகாசமாக வந்தீங்க?

நட்டுவனார்:—குழந்தைக்குப் பரதநாட்டியம் சொல்லிக் கொடுக்க வேணும் என்று அம்மா சொல்லியிருந்தாங்க!

வீட்டுக்காரர்:— அப்படியா சமாசாரம்! கொஞ்சம் அவசரமாய் வந்துட்டீங்களே! இன்னும் குழந்தையே பிறக்கவில்லை!

# வந்தனம், ஐயா!


அன்புள்ள ஐயா.
உங்களுக்கு என்
மனமார்ந்த வணக்கத்தையும்
வந்தனத்தையும் தெரிவித்துக்
கொள்கிறேன்


இந்த வருஷம் ஆனி மாதம்
எப்படியாவது அம்புஜத்தை என்
தலையில் கட்டிவிடுவது என்று
என் மாமா கங்கணம்
கட்டிக் கொண்டிருந்தார்.


என் அப்பாவோ, எப்படியாவது
எனக்குத் தாலூகா ஆபீஸில் ஒரு
குமாஸ்தா உத்தியோகத்தை
வாங்கிக் கொடுத்துவிட்டுத்தான்
மறுவேலை பார்ப்பது
என்று எண்ணிக்
கொண்டிருந்தார்.


என் அம்மாவோ, நான்
லாகாலேஜிலே படித்து
ஹைகோர்ட் ஜட்ஜாக
வரவேண்டுமென்று
ஆசைப்பட்டாள்


ஆனால், நானோ சினிமாவுக்கும்
டிராமாவுக்கும் ஹோட்டலுக்கும்
குஷியாகப் போய்க் கொண்டிருக்க
வேண்டுமே. அதற்கு எங்கே ஆபத்து
ஏற்பட்டு விடுமோ, ஈஸ்வரா என்று
ஏங்கிக் கவலைப்பட்டுக்
கொண்டு இருந்தேன்.


நல்ல வேளையாக அதற்கு
ஆபத்து எதுவும் ஏற்படவில்லை.
அப்படி என்னைக் காப்பாற்றிய
புண்ணியம் உங்களைச்
சேர்ந்தது


நீங்கள் மாத்திரம் மனம் வைத்து
என்னைப் பரீட்சையில் பெயிலாக்கி
யிராவிட்டால், என்னுடைய கதி
என்ன ஆகியிருக்கும்? நீங்கள்
செய்த உதவிக்காக
உங்களுக்கு நான் என்
றென்றைக்கும் கடமைப்
பட்டிருக்கிறேன்.


வரும் செப்டம்பர் மாதமும் உங்களை
மீண்டும் சந்திக்கிறேன். இப்போது
பி. எஸ். ஐயர் டியூடோரியல்
காலேஜை நோக்கிப்
போய் வரட்டுமா?
இப்படிக்கு
'கோட்' அடித்த
கோபாலன்.

# உங்கள் (தேக) ஆரோக்கியத்தை

# பருகுங்கள்




போர்ன்-வீடா பாலை விடச் சிறந்தது, அதில் சக்தி தரும் விடமின்களும், கால்ஷியமும் அடங்கியுள்ளன. விளையாட்டுக்காரருக்கும் பலஹீனருக்கும் ஒருங்கே இன்றியமையாதது. குழந்தைகள் அதன் சாக்லேட் மணத்தை விரும்புவர். காலையிலும் இரவிலும் சூடாகவோ அல்லது குளிர்ந்த பானமாகவோ, ஒரு கிளாஸ் பாலுடன் இரண்டு தேக்கரண்டியளவு சேர்த்துப் பருகவும்.




—ஆரோக்கிய விருக்ஷம்—




CFY 2 TAM

## காட்பரீஸ்

## போர்ன்-வீடா

கால்ஷியமும், ஏ & டி விடமின்களும் நிறைந்தது

காட்பரி-ப்ரை (இந்தியா) லிமிடெட்

தபால் பெட்டி நெ. 1417 பம்பாய்-தபால் பெட்டி நெ. 251 கல்கத்தா-தபால் பெட்டி நெ. 1725 சென்னை

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

## 259. துணைவன் தான் பேசினான்!

"யாரோ அரக்கர்கள் வந்திருக்கிறார்கள், அவர்களது காரியம் என்ன என்று விசாரித்து வா!" என்று மயிந்தனை அனுப்பிய ராமன், அவன் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். மிக்க ஆவலோடு எதிர் பார்த்துக் கொண்டிருந்தான்.

வந்ததும் ராமனிடம் சொல்லுகிறான் மயிந்தன் :

'உண்டுரை உணர்த்துவ(து)
  ஊழி யாய்' எனப்,
புண்டரீ கத்தடம்
  புரையும் பூட்சியான்,
மண்டிலச் சடைமுடி
  துளக்கி 'வாய்மையாய்!
கண்டதும் கேட்டதும்
  கழறு வாய்' என்றான்.

[உண்டுரை உணர்த்துவது: உன்னிடம் சொல்ல வேண்டிய விஷயம் இருக்கிறது: ஊழியாய் என: நித்திய வஸ்துவான ராம மூர்த்தியே என்று மயிந்தன் சொல்ல; புண்டரீகத் தடம் புரையும் பூட்சியான்: விரிந்த தாமரையை ஒத்த கண்ணனான ராமன்; மண்டிலச் சடைமுடி துளக்கி: வட்டமாக முடித்த சடையை 'அப்படியா! ஓஹோ!' என்ற பாவனையில் ஆட்டி; வாய்மையாய்: மயிந்தனே: கண்டதும் கேட்டதும் கழறுவாய் என்றான்: கண்டதையும் கேட்டதையும் சொல்லுவாயாக என்றான்—ராமன்.]

* * *

மயிந்தன் சொல்லுகிறான்: "இலங்கையில் என்ன நடந்தது என்று தெளிவாய்த் தெரியவில்லைதான். ஆனாலும் ராவணனது தம்பி விபீஷணன் என்பவன் நிராயுதபாணியாய் நம்மிடையே வந்து சேர்ந்திருக்கிறான்."

வினைவினை அறிந்திலம்:—
  விட மைப்பெயர்,
நளிர்மலர்க் கையினன்
  நால்வ ரோ(டு)உடன்
களவியல் வஞ்சனை
  இலங்கைக் காவலற்(கு)
இளவல், நம் சேனையின்
  நடுவண் எய்தினான்.

[வினைவினை: என்ன என்ன நடந்திருக்கிறது என்பதை; நளிர் மலர்க் கையினன்: தாமரைப் புஷ்பத்தை ஏந்தியவனும்:—அதாவது நிராயுதபாணியாய், சமாதானத்தை விரும்பியவனும்; நால்வரோடு உடன்: வேறு நாலு துணைவருடன்; களவியல் வஞ்சனை:

## நம்பிக்கை!



"என்னடா, கிட்டு! எங்க முதலாளி உங்க முதலாளி கிளப்பிலே நல்ல காப்பியா யிருக்குமென்று வாங்கிக் கொண்டு வரச் சொன்னார்; அதற்காகப் புறப்பட்டேன்! நீ எங்கேடா கிளம்பினாய்?"

"அடடே! எங்க முதலாளி உங்க முதலாளி கிளப்பிலே நல்ல காப்பியா யிருக்குமென்று என்னை அனுப்பிச்சார்!"

ஏமாற்றும் தொழிலில் மூழ்கியவனான வஞ்சகன் ; இலங்கைக் காவலற்கு இளவல் : இலங்கை அரசனான ராவணனது தம்பி ; நம் சேனையின் நடுவண் எய்தினான் : நம் சேனையின் எதிரிலேயே வந்து நின்றுவிட்டான்.

குறிப்பு :—மயிந்தன் சொல்லுவதைக் கேட்பதில் ராமனுக்கு மிக்க ஆத்திரம். அப்படி ஆத்திரம் இருக்கிறது என்பது மயிந்தன் பேச்சே, (வினவின அந்த முடிவிலேயே என்ற சொல்லே) எடுத்துக் காட்டுகிறது.

* * *

மயிந்தன் மேலும் சொல்லுகிறான் :

"அரக்கர்கள் வந்து சேர்ந்த இடத்திற்குச் சரியான தருணத்தில் நானும் போய்ச் சேர்ந்தேன். நம்முடைய வானரங்கள் அரக்கர்களை, 'கொல்லுங்கள், பிடியுங்கள்' என்று கத்திக்கொண்டு தாக்கப் போயின. வானரங்களைக் கொஞ்சம் நில்லுங்கள் என்று அமர்த்தி, அரக்கர்களிடம் போய் அவர்களை யார் என்று விசாரித்தேன்."

'கொல்லுமின் பற்றுமின்
என்னுங் கொள்கையால்ப்
பல்பெருந் தானைசென்(று)
அடர்க்கப் பார்த்(து)யான்
நில்லுமின் என்று,நீ
யாரை, நின்னிலை
சொல்லுதி, என்ன,ஓர்
துணைவன் சொல்லினான்.'

[பற்றுமின் : கட்டிப் பிடியுங்கள் ; என்னும் கொள்கையால் : உண்மையாகக் கொல்ல எண்ணித்தானே ; பல் பெருந்தானை சென்று அடர்க்க : பல வீரர் சேர்ந்த படை போய் நெருங்க ; பார்த்து யான் : அதை நான் பார்த்து ; நில்லுமின் என்று : நில்லுங்கள் என்று வானரங்களை அடக்கி, அந்த விபீஷணனைப் பார்த்து— நீ யாரை, நின்னிலை சொல்லுதி என : நீ யார்? நீ என்ன நிலையில் இங்கு வந்திருக்கிறாய் சொல்லு என்று விபீஷணனைக் கேட்கவும் ; துணைவன் சொல்லினான் : அவனுடன் வந்த துணைவன் பேச ஆரம்பித்தான்.]

விபீஷணனுக்கு மனசில் தாங்க முடியாத கவலை. தலைவன் என்ன பாதகம் செய்திருக்கிறான்! இந்த நிலையில் ராமனை எப்படி அணுகுவது, என்ற எண்ணத்தால் இதயம் இடிகிறது. பேச நா எழவில்லை. இந்த உணர்ச்சியின் வேகத்தைக் குறித்து நிற்கிறது "ஓர் துணைவன் சொல்லினான்" என்ற தொடர்.

# மாங்கருக்குள் ஒரு தெய்வம்



ரா.கி.

## 11. யுத்த மகாநாடு

முதலாவது உலக மகாயுத்தம் 1918ம் வருஷத்தில் பயங்கரமான கட்டத்தை அடைந்திருந்தது. பிரிட்டன் முதலிய நேச தேசங்களின் நிலைமை மிக நெருக்கடியாகி யிருந்தது. இந்த நிலைமையில் இந்தியாவின் இராஜப் பிரதிநிதி லார்ட் செம்ஸ் போர்டு டில்லியில் ஒரு யுத்த மகாநாடு கூட்டினார். அதற்கு வரும்படி இந்தியாவின் பிரபல தலைவர்கள் பலருக்கும் அழைப்பு அனுப்பினார். மகாத்மா காந்திக்கும் அழைப்பு வந்தது.

அழைப்புக் கிணங்கி காந்திஜி டில்லிக்குச் சென்றார். ஆனாலும் யுத்த மகாநாட்டில் கலந்து கொள்ளுவது பற்றிப் பல சங்கடங்கள் அவருக்கு இருந்தன.

அச்சமயம் அலி சகோதரர்கள் என்று அழைக்கப்பட்ட மௌலானா முகம்மதலியும், மௌலானா ஷவுகத் அலியும் சிறைப்பட்டிருந்தார்கள். காந்திஜி இந்தியாவுக்கு வந்தது முதல் ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைக்காகப் பாடுபட்டுக் கொண்டிருந்தார். அத்தகைய ஒற்றுமை இந்தியாவின் விடுதலைக்கும் முன்னேற்றத்துக்கும் மிக அவசியம் என்று நினைத்தார். ஆகையால் அலி சகோதரர்களை விடுதலை செய்யவேண்டிய அவசியத்தைப் பற்றி ஏற்கெனவே இந்திய சர்க்காருடன் கடிதப் போக்குவரவு நடத்திக் கொண்டிருந்தார்.

அலி சகோதரர்கள் அப்போது கிலாபத் இயக்கத்தை ஆரம்பித்திருந்தனர். முதல் உலக மகாயுத்தத்தில் துருக்கி ஜெர்மனியின் கட்சியில் சேர்ந்திருந்தது. துருக்கி சுல்தான் அகில உலகத்திலும் வசித்த முஸ்லிம்களின் மதத் தலைவராகக் கருதப்பட்டார். இதனால் 'கலீபா' என்ற பட்டப் பெயரும் துருக்கி சுல்தானுக்கு இருந்தது. யுத்தத்தில் பிரிட்டிஷ் கட்சி ஜயித்தால் முஸ்லிம் மதத் தலைவரான துருக்கி சுல்தானுடைய கௌரவத்துக்குப் பங்கம் விளையுமோ என்று இந்திய முஸ்லிம்கள் கவலை கொண்டிருந்தார்கள். அப்படி ஏற்படாமல் பார்த்துக் கொள்வதாக பிரிட்டன் வாக்குறுதி தரவேண்டும் என்று கோரினார்கள். இத்தகைய கிளர்ச்சியைத் தலைமை வகித்து நடத்திய காரணத்தினாலேயே அலி சகோதரர்கள் சிறைத் தண்டனை அடைந்திருந்தார்கள்.

இந்திய முஸ்லிம்களின் நட்புரிமையை மிக, முக்கியமாகக் கருதிய மகாத்மா காந்தி அவர்களுடைய மத சம்பந்தமான கோரிக்கையை ஆதரிப்பது தம்முடைய கடமை என்று கருதினார். ஆகையால் அலி சகோதரர்கள் சிறைப்பட்டிருக்கும் நிலைமையில் தாம் யுத்த மகாநாட்டில் கலந்து கொள்ளலாமா என்று யோசித்தார்.

லோகமான்ய திலகரும், ஸ்ரீமதி பெஸண்டு அம்மையும் மேற்படி யுத்த மகாநாட்டுக்கு அழைக்கப்படவில்லையென்று அறிந்ததும் மகாத்மாவின் தயக்கம் அதிகமாயிற்று.

இந்த நிலைமையில் பூஜ்யர் ஆண்ட்ரூஸ் இன்னும் சில ஆட்சேபங்களைக் கிளப்பினார். "அஹிம்சாவாதியாகிய தாங்கள் யுத்த மகாநாட்டில் எப்படிக் கலந்து கொள்ளலாம்?" என்பது ஓர் ஆட்சேபம். ஆனால் தென்னாப்பிரிக்காவிலேயே ஏற்பட்ட பிரச்னைதான் இது. மகாத்மா இந்த ஆட்சேபத்தைப் பற்றி ஒரு முடிவுக்கு வந்திருந்தார். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் பாதுகாப்புக்கு உட்பட்டிருக்கிற வரையில் அந்த சாம்ராஜ்யத்துக்கு நேரும் அபாயங்களின்



பூஜ்யர் ஆண்ட்ரூஸ்

போது உதவி செய்யத்தான் வேண்டும். தாம் சொந்த முறையில் நம்பிக்கை கொண்ட அஹிம்சா தர்மத்தை இந்த விஷயத்தில் புகுத்துவது முறையன்று. ஆனால் பூஜ்யர் ஆண்ட்ரூஸ் கூறிய இன்னொரு ஆட்சேபத்துக்கு அவ்வளவு சுலபமாகப் பதில் சொல்ல முடியவில்லை. அச்சமயம் பிரிட்டனுக்கும் இத்தாலிக்கும் ஏற்பட்டிருந்த இரகசிய உடன்படிக்கைகளைப் பற்றி பிரிட்டிஷ் பத்திரிகையில் சர்ச்சை நடந்துகொண்டிருந்தது "பிரிட்டிஷ் ராஜ தந்திரிகள் இந்தமாதிரி அக்கிரமமான காரியங்களைச் செய்துகொண்டிருக்கும்போது இந்த யுத்தத்தைத் தர்ம யுத்தம் என்று எப்படிச் சொல்லலாம்? நீங்கள் எப்படி இதற்கு உதவி செய்யலாம்?" என்று ஸ்ரீ ஆண்ட்ரூஸ் கேட்டார்.

மேற்கூறிய எல்லா ஆட்சேபங்களையும் வைஸ்ராய் செம்ஸ் போர்டிடம் நேரில் சொல்லிச் சமாதானம் கேட்பது என்ற எண்ணத்துடன் மகாத்மா டில்லிக்குப் போனார். லார்டு செம்ஸ் போர்டை நேரில் பேட்டி கண்டு பேசினார். இரகசிய உடன்படிக்கைகள் சம்பந்தமாக லார்ட் செம்ஸ் போர்டு கூறியதாவது: "பிரிட்டிஷ் மந்திரி சபை செய்யும் ஒவ்வொரு காரியத்துக்கும் நான் பொறுப்பாளியல்ல. பிரிட்டிஷ் அரசாங்கம் தவறே செய்யாது என்றும் நான் சொல்லவில்லை. பொதுவாக பிரிட்டிஷ் சம்பந்தத்தினால் இந்தியா நன்மை அடைந்திருக்கிறது என்று நீங்கள் கருதினால் இந்த நெருக்கடியான சமயத்தில் உதவி செய்வது அவசியம். பிரிட்டிஷ் இரகசிய உடன்படிக்கைகளைப் பற்றி பத்திரிகையில் வந்திருப்பதைத் தவிர எனக்கு ஒன்றும் தெரியாது. சில சமயம் பத்திரிகைகள் கற்பனைக் கதைகளைக் கட்டி விடுவதும் உண்டு. பத்திரிகைக் கதைகளை நம்பி நீங்கள் முக்கியமான ஒரு விஷயத்தில் முடிவு செய்யக்கூடாது. யுத்தம் முடிந்த பிறகு அரசியல் தர்மம் சம்பந்தமான உங்களுடைய பிரச்னைகளைக் கிளப்பி வாதம் செய்யலாம். இந்த நெருக்கடியான சமயத்தில் உதவி செய்ய மறுப்பது உசிதமன்று."

இவ்விதம் லார்டு செம்ஸ் போர்டு சொன்னதினால் காந்திஜியின் மனம் ஓரளவு சமாதானம் அடைந்தது. எப்படியிருந்தாலும் யுத்த மகா நாட்டுக்குப் போவது என்று தீர்மானித்தார்.

• • •

யுத்த மகாநாட்டில் யுத்தத்துக்கு ஆள் திரட்டும் தீர்மானம் ஒன்று வந்தது. இதுதான் மகாநாட்டில் முக்கிய தீர்மானம். இதை மகாத்மா காந்தி ஆதரித்துப் பேசவேண்டும் என்று வைஸ்ராய் செம்ஸ்போர்டு விரும்பினார். காந்திஜியும் அதற்கு இணங்கினார். ஆனால் ஹிந்துஸ்தானியில் பேசுவதற்கு அநுமதி கேட்டுப் பெற்றுக் கொண்டார். "என்னுடைய பொறுப்பைப் பூரணமாக உணர்ந்து இந்தத் தீர்மானத்தை ஆதரிக்கிறேன்" என்னும் ஒரே வாக்கியத்தை மகாத்மா இந்த மகாநாட்டில் சொன்னார்.

காந்திஜி ஹிந்துஸ்தானியில் பேசியது பற்றிப் பலர் அவருக்கு வாழ்த்துக் கூறினார்கள். வைஸ்ராய் பிரசன்னமாகியிருந்த ஒரு கூட்டத்தில் ஹிந்துஸ்தானியில் பேசப்பட்டது இதுதான் முதல் தடவை என்றும் சொன்னார்கள். காந்திஜிக்கு இது மிகவும் அவமானகரமாகத் தோன்றியது. இந்திய தேசத்தில் இந்தியாவின் பாஷையில் பேசியதற்காக ஒரு பாராட்டுதலா என்று வருந்தினார்.

சைன்யத்துக்கு ஆள் திரட்டும் தீர்மானத்தை ஆதரித்து மகாத்மா ஒரு வாக்கியந்தான் பேசினார் என்றாலும் அந்தத் தீர்மானத்தைக் காரியத்தில் நடத்தி வைப்பதற்குத் தன்னால் இயன்ற முயற்சியைச் செய்யவேண்டும் என்று கருதினார். அத்தகைய முயற்சி தொடங்குவதற்கு முன்னால் தம்முடைய நிலைமையை நன்கு விளக்கி இராஜப் பிரதிநிதி செம்ஸ் போர்டுக்கு ஒரு கடிதம் வரைந்து அதை ரெவரண்டு அயர்லாண்டு என்பவரிடம் கொடுத்தனுப்பினார்.

மேற்படி கடிதத்தின் முக்கியமான பகுதிகள் பின் வருமாறு:—

"தங்களுக்கு ஏப்ரல் 26வ ஒரு கடிதம் எழுதினேன். அதில் யுத்த மகாநாட்டில் நான் கலந்துகொள்ள முடியாமல் இருப்பதற்குக் காரணங்களைத் தெரிவித்திருந்தேன். அதன் பின்னர் தாங்கள் அன்பு கூர்ந்து தங்களை நேரில் கண்டு பேச அனுமதி யளித்தீர்கள். அவ்வாறு பேசிய பின்னர், வேறு காரணம் இல்லாவிடினும், தங்களிடம் எனக்கிருந்த பெருமதிப்பை முன்னிட்டேனும் மகாநாட்டில் கலந்து கொள்வதென்று தீர்மானித்தேன். மகாநாட்டில் கலந்து கொள்ளக் கூடாதென்று நான் முதலில் கருதியதற்கு முக்கியமான காரணம், லோகமான்ய திலகர், ஸ்ரீமதி பெஸண்டு அம்மையார், அலி சகோதரர்கள் ஆகியவர்கள் மகாநாட்டிற்கு அழைக்கப்படாததே யாகும். பொதுஜன அபிப்பிராயத்தை உருப்படுத்தக் கூடிய மிக சக்தி வாய்ந்த தலைவர்களென்று இவர்களை நான் மதித்திருக்கிறேன். இவர்களை அழையாது விட்டது பெருந்தவறு என்றே இன்னமும் நான் கருதுகிறேன். இத்தவறை நிவர்த்திப்பதற்கு வழியையும் மரியாதையுடன் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இனி, மாகாணந்தோறும் யுத்த மகாநாடுகள் நடைபெறுமெனத் தெரிகிறது. இந்த மகாநாடுகளுக்காவது வந்து அரசாங்கத்துக்கு யோசனை சொல்லி உதவுமாறு மக்களின் மதிப்புக்குப் பாத்திரமான அத்தலைவர்களை அழைக்க வேண்டும்.

சமீப காலத்தில் நாங்களும் மற்ற குடியேற்ற நாடுகளைப் போலவே பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தில் சமபங்காளிகளாகலாமென்னும் ஆசை கொண்டிருக்கிறோம். எனவே, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு அபாயம் வந்த காலத்தில் எவ்விதத் தயக்கமுமின்றிப் பூரண ஆதரவு அளித்தல் அவசியமென்பதை நன்குணர்ந்திருக்கிறோம். அவ்வாறே தீர்மானமும் செய்திருக்கிறோம். ஆனால் இவ்வாறு உதவி செய்ய ஆவலுடன் முன் வந்ததற்கு, அதன் மூலம் நமது இலட்சியத்தை விரைவில் அடையலாமென்னும் நம்பிக்கையே காரணம் என்பது உண்மை. கடமையைச் செய்வோன் அந்த அளவில் உரிமையும் பெறுகின்றான். ஆதலின் தங்களுடைய பிரசங்கத்தில் விரைவில் வரப்போவதாகக் குறிப்பிட்டிருக்கும் அரசியல் திருத்தங்கள் காங்கிரஸ் — லீக் திட்டத்தை முக்கிய அம்சங்களில் அனுசரித்திருக்கும் என்று எதிர்பார்ப்பதற்கு ஜனங்களுக்கு உரிமையுண்டு. இந்த நம்பிக்கையின் மேல்தான் மகாநாட்டிற்கு வந்திருந்த அங்கத்தினரில் அநேகர் தங்கள் மனப்பூர்வமான ஒத்துழைப்பை அரசாங்கத்துக்கு அளிக்க முன் வந்தார்கள்.

தென்னாப்பிரிக்காவிலிருந்து நான் இந்தியாவுக்குத் திரும்பியது முதல் குடியானவர்களிடம் நெருங்கிப் பழகி வந்திருக்கிறேன். அவர்களுக்கு சுயராஜ்ய தாகம் நிரம்ப ஏற்பட்டிருக்கிறதென்று தங்களுக்கு உறுதி கூறுவேன். சென்ற காங்கிரஸ் மகாசபையின் கூட்டத்திற்கு நான் சென்றிருந்தேன். குறிப்பிட்ட காலத்திற்குள் பூரண சுயாட்சி பிரிட்டிஷ் இந்தியாவுக்குக் கொடுக்கப்பட வேண்டும் என்னும் தீர்மானத்தை நிறைவேற்றுவதில் நானும் கலந்துகொண்டேன். திட்டமான ஒரு காலத்திற்குள் சுயாட்சி கிடைக்குமென்னும் நம்பிக்கை ஏற்பட்டால்தான் இந்திய மக்கள் திருப்தி அடைவார்களென்பது நிச்சயம்.

கடைசியாக நான் தங்களைக் கேட்டுக் கொள்ளுவது என்னவென்றால், முஸ்லிம் ராஜ்யங்களைப்பற்றி பிரிட்டிஷ் மந்திரிகள் திட்டமான வாக்குறுதி யளிக்குமாறு தாங்கள் செய்யவேண்டும். ஒவ்வொரு முஸ்லிமும் இவ்விஷயத்தில் பெரிதும் சிரத்தை கொண்டிருப்பதைத் தாங்கள் அறிவீர்கள். ஆதலின் ஹிந்துவாகிய நான் இவ்விஷயத்தில் அசட்டை காட்டக் கூடாது. அவர்களுடைய துக்கங்களை எங்களுடைய துக்கங்களாகவே கருத வேண்டும். முஸ்லிம் ராஜ்யங்களின் உரிமைகளைக் காப்பது; முஸ்லிம் புண்ணிய க்ஷேத்திரங்களின் விஷயத்தில் அவர்கள் உணர்ச்சியை மதிப்பது; இந்தியாவின் சுயாட்சிக் கோரிக்கையைக் காலா காலத்தில் நியாயமான முறையில் நிறைவேற்றி வைப்பது; இவைகள்தான் சாம்ராஜ்யத்தின் பாதுகாப்பிற்கு மிகவும் முக்கியமான சாதனங்களாகும். ஆங்கில மக்களை நான் நேசிக்கிறபடியாலும் ஆங்கிலேயர்களுடைய ராஜ பக்தியை ஒவ்வொரு இந்தியரிடத்தும் உண்டு பண்ண நான் விரும்புவதாலுமே இக்கடிதம் உங்களுக்கு எழுதலானேன்."

காந்திஜி 1918-ம் வருஷத்தில் இம்மாதிரி இராஜப்பிரதிநிதிக்குக் கடிதம் எழுதினார். அந்த நாளில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை விட்டு இந்தியா வெளியில் போகக் கூடும் என்ற எண்ணமே யாருக்கும் உண்டானதில்லை. 'சுதந்திரம்' என்ற வார்த்தையைக் கூட யாரும் உபயோகிப்பதில்லை; 'சுயாட்சி' என்றுதான் எல்லாரும் சொல்லி வந்தார்கள். முப்பது வருஷத்துக்குள் நிலைமை எப்படி மாறிவிட்டது என்பதை நினைத்துப் பார்த்தால் ஆச்சரியமாக இல்லையா?

* * *

இராஜப் பிரதிநிதிக்குக் கடிதம் எழுதி அனுப்பிவிட்டு மகாத்மா உடனே

நதியாத் நகரத்துக்குச் சென்றார். வரி கொடா இயக்கத்தை நடத்திய ஜில்லாவிலேயே சைன்யத்துக்கு ஆள் சேர்க்கும் வேலையை ஆரம்பிக்க வேண்டும் என்று கருதினார். ஸ்ரீ வல்லபாய் படேல் முதலிய சகாக்களுடன் கலந்தாலோசித்தார். அவர்கள் இந்தக் காரியத்தில் அவ்வளவு உற்சாகம் காட்டவில்லை. முயற்சி செய்தாலும் பலன் கிட்டாது என்று சொன்னார்கள். பொது ஜனங்கள் சர்க்காரிடம் கொண்டிருக்கும் விரோதபாவத்தை அவ்வளவு சீக்கிரத்தில் மாற்றிவிட முடியாது என்று கூறினார்கள்.

ஆயினும் காந்திஜியின் கட்டளையை மதித்து வேலை செய்வதற்கு முன்வந்தார்கள். அவர்கள் முன் வந்தால் மட்டும் போதுமா? பொது ஜனங்களுடைய ஒத்துழைப்பு கிட்டவில்லை. வரி கொடா இயக்கத்தின்போது போட்டி போட்டுக்கொண்டு உதவி செய்ய முன்வந்தவர்கள் இப்போது ஒதுங்கி ஒதுங்கிப் போனார்கள். தலைவர்கள் ஊர் ஊராய்ப் போவதற்கு அப்போது வாடகையில்லாமல் வண்டிகள் கிடைத்தன. இப்போது வாடகை கொடுத்தாலும் வண்டி கிடைக்கவில்லை! ஆகவே தினம் இருபது மைல் வரையில் மகாத்மா காந்திஜியும் அவருடைய துணைவர்களும் நடந்து சென்று பிரசாரம் செய்ய வேண்டியிருந்தது. ஜனங்கள் சாப்பாடு போடுவதிலும் உற்சாகம் காட்டவில்லை. ஆகையால் அவர்கள் கையோடு சாப்பாடு கொண்டுபோக வேண்டியிருந்தது.

இப்படியெல்லாம் எதிர்ப்பு இருக்கும் என்று மகாத்மா எதிர்பார்க்கவில்லை. ஆனாலும் அதைக் கண்டு மனந்தளர்ந்துவிடவும் இல்லை. கடமை என்று ஏற்றுக்கொண்ட காரியத்தை எத்தனை இடையூறு வந்தாலும் எதிர்த்துச் சமாளித்து நடத்துவது காந்திஜியின் தர்மமல்லவா?

கிராமங்களில் பொதுக்கூட்டம் கூட்டினால் முன்போல் ஏராளமாக ஜனங்கள் வருவதில்லை. சிலர் தான் வந்தார்கள். அவர்களும் குறுக்குக் கேள்விகள் கேட்டார்கள். "நீங்கள் அஹிம்சை உபாசகர் ஆயிற்றே? சைன்யத்துக்கு எப்படி ஆள் சேர்க்கலாம்?" என்றார்கள். "அரசாங்கம் எங்களுக்கு என்ன உதவி செய்தது? நாங்கள் எதற்கு இப்போது ஒத்துழைக்க வேண்டும்?" என்றார்கள்.

ஆயினும் மகாத்மாவின் பிடிவாதமான வேலை பலன் தராமற் போகவில்லை. நாளடைவில் ஜனங்கள் சைன்யத்தில் சேருவதற்குத் தங்கள் பெயர்களைக் கொடுக்க முன் வந்தார்கள்.

இடைவிடாமல் ஆள் திரட்டும் வேலை செய்து வந்ததின் காரணமாக மகாத்மாவின் உடல் நிலை பாதகம் அடைந்தது. ஒருநாள் வயிற்றுக் கடுப்பு நோய் வந்துவிட்டது. அன்றைக்குச் சபர்மதி ஆசிரமத்திலிருந்து மகாத்மா நதியாத்துக்குப் போகத் திட்டம் போட்டிருந்தார். ஆசிரமத்திலிருந்து ஒன்றேகால் மைல் தூரத்திலிருந்த ஸ்டேஷனுக்கு நடந்தே சென்றார். ஆமதாபாத் ஸ்டேஷனில் அவருடன் சேர்ந்து கொண்ட ஸ்ரீ வல்லபாய் படேல் காந்திஜிக்கு உடம்பு சுகமில்லை என்பதைக் கண்டு கொண்டார். திரும்பிவிடலாம் என்று அவர் சொன்னதை மகாத்மா கேட்கவில்லை. இரவு பத்து மணிக்கு இருவரும் நதியாத் ஸ்டேஷனில் இறங்கி அநாதாசிரமம் சென்றார்கள். அங்கே மகாத்மாவுக்கு வயிற்றுப்போக்கு நோய் மிகக் கடுமையாகிவிட்டது. நண்பர்கள் கவலைப்பட்டு வைத்தியர்களை அழைத்து வந்தார்கள். மகாத்மா வைத்தியம் செய்து கொள்ளவும் மருந்து சாப்பிடவும் மறுத்துவிட்டார். ஊசி குத்திக்கொள்ளவும் இணங்கவில்லை. பட்டினி கிடந்தால் சரியாய்ப் போய்விடும் என்ற நம்பிக்கையைத் தெரிவித்தார். இருபத்துநாலு மணி நேரம் பட்டினி கிடந்த பிறகு பசியே இல்லாமல் போய்விட்டது. பலவீனம் முற்றிவிட்டது. வயிற்றுப் போக்குடன் சுரம், பிதற்றல் எல்லாம் சேர்ந்துவிட்டது. மகாத்மா தம்முடைய மரணம் சமீபித்துவிட்டது என்று நம்பினார். அம்பாலால் சாராபாய் முதலிய நண்பர்கள் ஆமதாபாத்திலிருந்து அவரைப் பார்க்க வந்தார்கள். தம்மை ஆசிரமத்தில் கொண்டுபோய் விட்டுவிடும்படி அவர்களிடம் கேட்டுக் கொண்டார். அவர்கள் அவ்வாறே செய்தார்கள்.

சபர்மதி ஆசிரமத்தில் காந்திஜி யமனோடு போராடிக் கொண்டிருந்த சமயத்தில் யுத்தம் முடிந்துவிட்டது என்றும் இனிமேல் ஆள் திரட்ட வேண்டியதில்லையென்றும் கமிஷனர் செய்தி அனுப்பினார். அந்தச் செய்தியை ஸ்ரீ வல்லபாய் படேல் மகாத்மாவிடம் வந்து கூறினார். மகாத்மாவின் மனதிலிருந்து ஒரு பாரம் இறங்கியது. உடல் நிலை மோசமானதினால் ஏற்றுக்கொண்ட கடமையைச் செய்ய முடியவில்லையே என்ற கவலை மகாத்மாவின் மனதில் இருந்தது. அந்தக் கவலை இப்போது நீங்கிற்று. அது முதல் மகாத்மாவின் உடம்பும் குணமடையத் தொடங்கியது. ஜல சிகிச்சை, பனிக் கட்டி சிகிச்சை முதலிய இயற்கை வைத்திய முறைகளைக் கடைப்பிடித்து வந்தார். நோய் நீங்கிய பிறகும் உடம்பில் பழைய பலம் வர நெடுநாள் ஆயிற்று.

# ஊருக்கு நல்லவன்

ரா. பாலகிருஷ்ணன்

அன்று பௌர்ணமி. இரவு சாப்பாட்டை முடித்துக்கொண்டு வீட்டு வாசலில் சாய்வு நாற்காலியைப் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தேன். என் பக்கத்தில் வந்து நின்ற புதிய ஆசாமி ஒருவன் என்னை உற்றுப் பார்த்துவிட்டு, "சாமி, நீங்கதானுங்களே?" என்றான்.

"அடேடே, முத்துவா! வா, அப்பா! என்ன, இரண்டு வருஷமாக இந்தப் பக்கமே உன்னைக் காணோம்? — சௌக்கியமா?" என்று விசாரித்தேன்.

"சௌக்கியத்துக்கு என்ன குறைச்சல்? ஏதோ உங்க புண்ணியத்திலே நாலு காசு கூடச் சம்பாதிச்சுக்கிட்டுத்தான் வந்திருக்கேன் — அதிருக்கட்டுங்க, ஒரு விஷயம் கேள்விப்பட்டேன்; அது நிஜந்தானான்னு உங்களைக் கேட்கணுமின்னு வந்தேன்!" என்றான் அவன்.

"என்ன அது? கேளேன்!" என்றேன்.

அவன் என்ன கேட்கப் போகிறான் என்பதையும் அதற்குள் ஒருவாறு நான் ஊகித்துக் கொண்டு விட்டேன். அதையேதான் அவனும் கேட்டான்.

"செங்கமலத்துக்கு நாளைக்குக் கல்யாணமாமே! அந்தக் கந்தன் பயலுக்குத்தான் அவளைக் கட்டிக் கொடுக்கப் போறாங்களாமே! உண்மைதானுங்களா?" என்றான்.

"உண்மைதான்; நீதான் அந்தப் பெண்ணைத் தவிக்க விட்டுவிட்டுப் போய்விட்டாயே! எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் நீ கல்யாணம் என்ற கவலையே இல்லாமல் ஊர் சுற்றலாம்; அந்தப் பெண் அப்படி இருக்க முடியுமா?"

"என்னங்க, நீங்களே இப்படிச் சொல்றீங்களே? அந்தக் குடிகாரப் பயல் அன்னிக்கு அவ்வளவு தூரம் என்னைப் பேசினது கடவுளுக்குக் கூடப் பொறுக்காதே! அதுக்காகத்தானே நான் இந்த ஊரை விட்டுப் போய்க் கொஞ்சம் 'பசை'யோடு திரும்பி வந்திருக்கேன்!—சரி, இனிமேல் அதைப் பத்திப் பேசி என்ன பிரயோசனம், சாமி? விட்டுத் தள்ளுங்க!—அப்போ நான் வரட்டுங்களா?" என்று தான் வந்த வழியை நோக்கி நடையைக் கட்ட ஆரம்பித்தான் முத்து.

அவனுடைய நிலைமை எனக்கு நன்றாக விளங்கிற்று. அப்போது அவனைப் போகும்படி விட்டால் என்னவாகும் என்பதையும் நான் எண்ணிப் பார்த்தேன். உடனே அவனுக்கு முடிந்தவரை உதவி செய்ய வேண்டுமென்று தோன்றிற்று. அவ்வளவுதான்; "நீ எங்கேயும் இப்போது போக வேண்டாம்; வீடு திறந்திருக்கிறது; நான் திரும்பி வருகிற வரை இங்கேயே இரு! காலையில் வேண்டுமானால் போய்க் கொள்ளலாம்" என்று கூறிவிட்டு, சட்டையை எடுத்துப் போட்டுக் கொண்டு வெளியே கிளம்பினேன்.

காடு முரடான நாட்டுப்புறத்து ரஸ்தாவில் என்னுடைய சைக்கிள் போய்க் கொண்டிருந்தபோது, மேடு பள்ளங்கள் நிறைந்த முத்துவின் வாழ்க்கை என் மனக் கண் முன்னால் வந்தது.

• • •

தாயும் தந்தையுமற்ற முத்துசாமி ஊருக்கெல்லாம் நல்லவன்தான் எனினும், கந்தனுக்கு மட்டும் வேண்டாதவனாயிருந்தான். இத்தனைக்கும் இயற்கையாகவே விரோதமுள்ள பாம்பு-கீரி, நாய்-பூனை இவைகளைப்போல் அவர்கள் இருவரும் பிறக்கும்போதே விரோதத்துடன் பிறக்கவில்லை. அவர்களுக்குள் ஏற்பட்ட மனவேற்றுமையும் சண்டை சச்சரவுகளும் நடுவில் முளைத்தவைதான். அதுவும் ஒரு பெண்ணால்! பெண்ணாசையும் மண்ணாசையும் கிளப்பி விடாத சண்டைகளும் சச்சரவுகளும்தான் இந்த உலகிலேயே கிடையாதே!

கந்தனுக்குக் கொஞ்சம் பூர்விகமான சொத்து உண்டு. ஒரு சிறிய வீடும் ஐந்து காணி நிலமும் அவனுக்குச் சொந்தமாயிருந்தன. தகுதியற்றவர்களிடம் செல்வத்தைக் கொடுக்கும் ஈசுவரன் அதன் அழிவைத் தேடிக் கொடுக்கும் பொறாமை, கர்வம் முதலிய குணங்களையும் சேர்த்துத்தானே அளிக்கிறான்? இதைத் தவிர, கந்தனுக்குச் சோம்பேறிகளின் நட்பும் குடிப் பழக்கமும் கூட உண்டு. அப்புறம் கேட்க வேண்டுமா, அவன் திமிருக்கு?

கந்தனுடைய மாமன் மகள்தான் செங்கமலம். தன் பெயரில் தொனிக்கிற அளவுக்கு அவள் சிவப்பாக இல்லாவிட்டாலும், குறுகுறுப்பான அவள் முகம் யாரையும் எளிதில் வசீகரிக்கும் சக்தியைப் பெற்றிருந்தது. ஊரிலுள்ள இளங் காளைகளுக்கெல்லாம் செங்கமலத்தின் மீது ஒரு கண்

இருந்துகொண்டே இருக்கும். ஆனால் கந்தனுக்கும் முத்துவுக்கும் மற்றெல்லோரையும் விட அவளிடத்தில் பற்றும், ஆசையும் ஒருபடி அதிகம்தான். கந்தனுக்கு 'முறைப் பெண்' செங்கமலம். ஆகையால் அவ்வப்போது அவளை மிரட்டி, உருட்டி, அதட்டி அதிகாரம் செய்து வந்தான் கந்தன். ஆனால் அவனையோ, அவன் வார்த்தைகளையோ செங்கமலம் பொருட்படுத்துவதே யில்லை.

முத்துசாமிக்குச் செங்கமலம் என்றால் உயிர். அவள்தான் அவனுக்கு உலகம். ஆனால், அவனுக்குப் பரிசம் போடக் குறைந்த பக்ஷம் முந்நூறு ரூபாயாவது வேண்டுமே? பரஸ்பரம் அன்பு மட்டும் இருந்தால் போதுமா? செங்கமலமும் எவ்வளவோ தடவை அவனிடம் இதை வெளிப்படையாகவே சொல்லியிருந்தாள்—"எப்படியாவது ஒரு முந்நூறு ரூபாய் பணம் மட்டும் நீங்க சம்பாதிச்சுப் பிட்டீங்கன்னு, அப்பாவை நம்ம கல்யாணத்துக்குச் சம்மதிக்க வைச்சுடுவேன், நான்!" என்று.

இந்தத் தொகையைச் சேர்க்கத்தான் அவன் என்னுடைய நிலத்தில் மாடுபோல் உழைத்தான். அவனுடைய கண்ணியமான நடத்தையையும் தரித்திர நிலையையும் உணர்ந்துதான், அதுவரை வேறொருவன் சாகுபடி செய்துவந்த என்னுடைய நிலத்தை நான் முத்துவிடம் ஒப்படைத்திருந்தேன். அவனும் செங்கமலத்தைப் பிரதானமாகக் கருதி இரவு பகலாக உழைத்து வந்தான்.

2

புரட்டாசி மாதம்; அந்த வருஷம் அமோகமாக மழை பெய்தது. ஐந்து நாட்கள் ஆகியும் வானம் மூடியபடியே இருந்தது. "இன்னும் இரண்டு நாட்கள் இதேமாதிரி மழை பெய்தால் கிராமமே நாசமாகிவிடுமே!" என்ற கவலை எங்கள் எல்லோரையும் வாட்டியது. எங்கு நோக்கினும் ஒரே வெள்ளக் காடு; நெற்பயிர்கள் அழுகிப் போய்விடும் நிலையிலிருந்தன. என் வயலும் கந்தன் வயலும் அடுத்தடுத்து இருந்தபோதிலும் அவனுடைய வயல் சற்று மேட்டுப்பாங்கான இடத்திலிருந்தது. ஆனால் என்னுடைய நிலத்துக்கும் ஒரு வசதியில்லாமல் போகவில்லை. அதை யடுத்து ஒரு வாய்க்கால் ஓடியதால், வயலில் தேங்கி நின்ற அதிகப்படியான தண்ணீரை வாய்க்காலில் பாய்ச்சி வடிக்க முடிந்தது. கந்தன் வயலுக்கு வடிகால் இல்லாமையால் அங்கு முழங்கால் அளவுக்கு மேல் ஜலம் தேங்கி நின்றது. அவனுடைய பயிர்கள் அவ்வளவும் நிலை சாய்ந்து அழுகத் தொடங்கி விட்டன.

அதனால்தான் அவன் அந்தத் துணிகரமான வேலையில் இறங்கினான். அவன்



வயலையும் என் வயலையும் பிரித்து நின்ற வரப்பை அன்று இரவோடு இரவாக வெட்டி விட்டான். அப்புறம் மேட்டிலிருந்த ஜலம் பள்ளத்திலிருந்த என் வயலுக்குள் பாய்வதற்குக் கேட்பானேன்? அந்தப் பாழும் வெள்ளம் வெறுமனே பாய்ந்தாலும் பரவாயில்லை; எத்தனையோ வேர் பெயர்ந்து நின்ற என் பயிர்களையும் அடியோடு அடித்துக்கொண்டு பாய்ந்தது வெள்ளம்!

இதைக் கண்ட மூத்துவுக்குப் பொறுக்கவில்லை. "என்னப்பா, கந்தா! இது நியாயமா? வருஷம் பூராவும் பட்டினி கிடந்து சாகணுமா, நான்? இந்தமாதிரி வரப்பை வெட்டி விட்டுப் பயிரை அழித்து விட்டாயே, இது தருமமா, உனக்கு?" என்று நிதானமாகவே கேட்டான்.

"நல்ல நியாயம் பேச வந்துட்டியே! நான் மாத்திரம் பட்டினி கிடக்காமே எப்படி சுகமா இருப்பேன் என்று நினைச்சே? அப்போ இந்த ஜலம் வடியற வழிதான் என்ன?" என்றான் கந்தன்.

"ஏதாவது ஒரு மூலையிலே வரப்பை வெட்டித் தொலைத்திருக்கக் கூடாதா? வரப்பு பூராவையும் அழிச்சு இப்படிப் பயிரையே பாழ் பண்ணி விட்டாயே!" என்றான் மூத்து வயிற்றெரிச்சலுடன்.

## காயமான வேலை!



சீனு:—சேஷு! காலிலே என்ன?

சேஷு:—இரண்டு நாளாக அடுப்பங்கரை உத்தியோகம்: சாதம் வடிக்கும்போது கஞ்சியைக் கொட்டிக் கொண்டேன்.

சீனு:—சரிதான்! உத்தியோகம் 'காய'மாகி விட்டதாக்கும்!

கந்தன் பொக்கிரித்தனத்துடன், "என்னடா, ரொம்ப அளக்கிறே? ஒரு ஆபத்து சாபத்துன்னு அப்படித்தான் நடக்கும். வேணும்னு உன்னுலே முடிஞ்சதைப் பார்த்துக்கோ, போ!" என்றான்.

மூத்துவின் ஆத்திரம் எல்லை மீறியது. அவனுடைய உரமேறிய கைகளால் ஒரு அறை கொடுத்திருந்தானானால் கந்தன் அங்கேயே துவண்டு விழுந்திருப்பான். ஆனால், அவன் அவ்விதம் செய்யாமல் கந்தனைப் பார்த்து, "டேய், போனது போகட்டும்; இப்பவாவது இந்த வரப்பை என்னுடன் சேர்ந்து சீர் செய்யப் போறியா, இல்லாட்டி......" என்று இழுத்தான்.

அதற்குள் கந்தன், "என்டா கத்தறே, கழுதை மாதிரி? அது எப்போவாவது நடக்கிற காரியமா, இனிமே? கடவுளை நினைச்சு போடா வீட்டுக்கு; நாளைக்கு வெய்யில் அடிச்சா பாதியாவது தேறும்!" என்றான் கேலியாக.

உண்மையில் அப்போது மழை விடுவதற்கான அறிகுறியே தென்படவில்லை. பயிரில் பாதிக்கு மேல் நாசமாகி விட்டன. இன்னும் இரண்டு மூன்று மணி நேரம் அதேமாதிரி தண்ணீர் பாய்ந்தால் பாக்கியும் அழிந்து போய்விடுவது நிச்சயம். மூத்து தன்னந்தனியாக வரப்பைச் செப்பனிடுவதும் முடியாத காரியம். அவனுக்கு உதவி செய்ய வேறு யார்தான் வரப்போகிறார்கள், அந்த வேளை கெட்ட வேளையில்?

மூத்துவுக்கு நாடி தளர்ந்துவிட்டது. மாதக் கணக்காக அவன் உழைத்ததெல்லாம் கந்தனின் கணநேர வேலையால் வியர்த்தமாகிவிட்டது. அவன் கட்டி விருந்த மனக் கோட்டை அடியோடு தகர்ந்து அவனுடைய எதிர்காலம் எல்லை யில்லாத சூன்யமாகக் காட்சி யளித்தது.

துயரமும் கோபமும் கலந்த குரலில் அவன் கந்தனைப் பார்த்து, "என்னை இப்படிக் கொடுமைப் படுத்தியதற்கு உன்னைத் தெய்வம் சும்மா விடாதுடா! என் பயிரையா அழிச்சே, நீ? என் உயிரை யில்லே அழிச்சே!" என்றான்.

கந்தனும் விடவில்லை. "என்னமோ சொந்தத்திலே நிலம் படைச்சவனைப் போலப் பேசறியே! 'என் பயிர், என் நிலம்'னு சொல்றியே, வெட்கமில்லே, உனக்கு? பிழைக்க வந்த பயலுக்குச் சொந்த நிலம் வேறே வச்ச வாழுதோ?" என்றான்.

அதுவரை பொறுமையோடிருந்த முத்துவுக்கு அதற்கு மேலும் ஆத்திரத்தை அடக்க முடியவில்லை. அவனும் ஒரு காலத்தில் தனக்கென்று சொந்த வீடும் நிலமும் வைத்துக் கொண்டு வாழ்ந்தவன்தானே? ஆகவே, அவன் வந்தது வரட்டுமென்று கந்தன் மேல் பாய்ந்து 'பளார், பளார்' என்று நாலு அறைகள் கொடுத்தான். கந்தன் நிலைதப்பிப் போய்க் கீழே விழுந்தான். மறுபடியும் ஒரு தடவை பாழாய்ப் போன அந்த வயலைப் பார்த்தான் முத்து. கண் கொண்டு பார்க்க முடியாதவாறு இருந்தது அக்காட்சி. அதற்கு விமோசனமே யில்லை என்பதைச் சந்தேகமறத் தெரிந்து கொண்ட அவன் அங்கிருந்து நேரே செங்கமலத்தின் வீட்டுக்கு ஓடினான்.

நல்ல வேளையாக அந்தச் சமயம் அவளுடைய அப்பனோ, அண்ணனோ யாரும் வீட்டிலில்லை. வயலில் நடந்த விஷயங்களை ஆதியோடந்தமாக அவளிடம் கூறிவிட்டு, "செங்கமலம், நான் மட்டும் இந்த உலகத்திலே கல்யாணமுன்னு செய்துக்கிறதா இருந்தா, உன்னைத் தவிர வேறே ஒரு பொண்ணையும் செய்துக்கிறதில்லே. உனக்கு என் பேரிலே உள்ள ஆசை மாத்திரம் நிஜமாயிருந்தா, இன்னும் ரெண்டு வருஷம் பொறுத்துக்கோ. கோயம்புத்தூரிலே எங்க மாமன் இருக்கிறாரு; அவரு மூலமா ஏதாச்சும் ஒரு வேலை சம்பாதிச்சுக்கிட்டு இரண்டே வருஷத்துக்குள்ளே வேண்டிய பணத்தோடு திரும்பி வந்துடறேன்" என்று சொல்லிவிட்டு, அன்றிரவே ஊரை விட்டுப் போயே போய் விட்டான்.

பாவம்! அவன் ஊரில் இருந்துதான் என்ன பிரயோஜனம்? என்னைத் தவிர அவனுக்கு உதவக்கூடியவர்கள் யார் இருக்கிறார்கள், அந்தக் கிராமத்தில்? எனக்கும் எதிர்பாராத விதத்தில் அந்த வருஷம் மழையினால் நஷ்டம் வந்து விடவே, என்னிடம் அதற்குமேல் யாதொரு உதவியும் எதிர்பார்ப்பது தவறு என்று அவன் நினைத்தான்.

### 3

அன்று ஊரை விட்டுப் போனவன் இரண்டு வருஷங்களுக்குப் பிறகு இன்றுதான் திரும்பிவந்திருக்கிறான். வெறுங் கையோடு வரவில்லை; செங்கமலத்தைக் கல்யாணம் செய்து கொள்வதற்கு வேண்டிய பணத்தோடுதான் வந்திருக்கிறான். ஆனால், எவ்வளவு பெரிய ஏமாற்றம் அவனுக்காகக் காத்திருந்தது?

## நல்ல யோசனை!



"என்னங்க பிள்ளைவாள்! நம்ம எண்ணெய்க் கடையிலே வேலை செய்ய ஒரு மொட்டை அடிச்சுக்கிட்டிருக்கிற பையன் இருந்தால் சொல்லுங்களேன்!"

"ஏன் மொட்டை அடிச்சுக்கிட்டிருக்கணும், செட்டியாரே! பையன் தலைமயிர் வைச்சிருந்தா என்ன?"

"தலைமயிர் வைச்சிருந்தால் எண்ணெயைச் சதா தலையிலே தடவிக்கிட்டுத் தலையை வாரிக்கிண்டு நிற்பானே தவிர, வேலையைக் கவனிக்க மாட்டானுங்க!"

---

அவன் வந்ததற்கு மறுநாள்தான் செங்கமலத்துக்குக் கல்யாணம் நடக்க விருந்தது. அதுவும், எந்த ஒரு போக்கிரியால், தான் ஊரை விட்டு, செங்கமலத்தையும் விட்டு, என்னிடம் கூட ஒரு வார்த்தை சொல்லாமல் ஓட நேர்ந்ததோ — அதே பயல் கந்தன்தான் அவளுக்குத் தாலி கட்டப் போகிறான்! — இதை யறிந்த முத்துவின் மனம் எப்படியிருக்கும்?

போன காரியத்தை முடித்துக் கொண்டு இரவு வெகு நேரம் கழித்துத்தான் நான் வீடு திரும்பினேன். அலைச்சலினாலும், இரவு தூக்கமின்மையினாலும் காலை மணி ஏழு ஆகியும் படுக்கையை விட்டு எழுந்திருக்க முடியவில்லை. சிறிது நேரத்துக்குப் பிறகு கதிரவனின் இளங் கதிர்கள் என் முகத்தில் தவழ்ந்து தூக்கத்தைக் கலைக்கவே, படுக்கையில் எழுந்து உட்கார்ந்தேன். அப்போது, "சாமி! என்ன இப்படித் தூங்குறீங்களே? எழுந்து வந்து பாருங்க—ஊரே அமளிப்படுதே!" என்று முத்து கூவிக் கொண்டே உள்ளே நுழைந்தான்.

நான் பரபரப்புடன் எழுந்து, "என்ன, என்ன! என்ன நடந்தது!" என்றேன்.

"நேற்று ராத்திரி ஆற்றங்கரை - மடத்திலே திருட்டுச் சாராயம் காய்ச்சினதுக்காகக் கந்தனையும், அவன் கூட்டாளிங்க ரெண்டு பேரையும் போலீசாருங்க வந்து 'அரெஸ்ட்' பண்ணி இழுத்துக்கிட்டுப் போயிட்டாங்களாம்; தன் மகள் கல்யாணம் நின்னு போயிடுச்சேன்னு செங்கமலத்தின் அப்பா இடிஞ்சிபோய்க் குந்தியிருக்காராம்!" என்றான் முத்து.

இந்தச் செய்தியைக் கேட்டதும் எனக்கு ஏற்பட்ட சந்தோஷத்திற்கு ஓர் அளவேயில்லை. "முத்து! என்ன இருந்தாலும் நீ அதிர்ஷ்டக்காரன் தான்! நீ இருக்கும் போது செங்கமலத்தின் முகூர்த்தம் தவறலாமா, என்ன?—நீ இங்கேயே இரு; இதோ ஒரு நிமிஷத்தில் வந்துவிடுகிறேன்!" என்று சொல்லிவிட்டு, நான் செங்கமலத்தின் வீட்டை நோக்கி நடந்தேன்.

செங்கமலத்தின் தகப்பன், கந்தன் கைதியான விஷயத்தை என்னிடம் சொல்லிக் கதறினான். நான் அவனுக்கு ஆறுதல் சொல்லி முகூர்த்தத்தை நிறுத்தவேண்டாமென்றும், முத்துவுக்குச் செங்கமலத்தைக் கல்யாணம் செய்து வைத்து விடலாமென்றும் யோசனை சொன்னேன்.

## உலகம் வேண்டாம்!



மனைவி:—என் மேல் உங்களுக்கு ஆசையே இல்லை......

கணவன்:—அதென்ன, அப்படிச் சொல்கிறாய்? இந்த உலகத்தையே வேண்டுமானாலும் நான் உனக்குக் கொடுக்கத் தயார்!

மனைவி:—உங்கள் உலகத்தை நீங்களே வைத்துக்கொள்ளுங்கள்! எனக்கு ஒரு வைர மூக்குத்தி வாங்கிக் கொடுங்கள், போதும்!

அந்தச் சமயத்தில் என்னுடைய யோசனையை அவனால் தட்ட முடியுமா, என்ன? அப்படியே ஏற்றுக் கொண்டான். அந்த முகூர்த்தத்தில் செங்கமலத்தின் கழுத்தில் 'மூணு முடிச்சை'ப் போட்டான் முத்து.

அவன் என்னை நமஸ்காரம் செய்ய வந்த போது செங்கமலம் மெதுவான குரலில், "பண்ணுங்க; இன்னும் ரெண்டு தரம் வேண்டுமானாலும் பண்ணுங்க! அந்தப் புண்ணியவானுக்கு எத்தனை நமஸ்காரம் செஞ்சாலும் தகும்!" என்றாள்.

அதைக் கேட்ட முத்து சிரித்தபடியே, "அதென்ன, எஜமான்கிட்டே எனக்கில்லாத மரியாதையும் விசுவாசமும் உனக்கு வந்தது?" என்றான்.

அப்போது செங்கமலம் என்னைப் பார்த்த பார்வை, 'நீங்கதான் அவருக்கு விஷயத்தைச் சொல்லுங்களேன்' என்பதைப் போலிருந்தது.

நான் விஷயத்தைச் சொன்னேன்:

"எனக்கு ரொம்ப நாட்களாகவே கந்தன் திருட்டுச் சாராயம் காய்ச்சுகிறான் என்று தெரியும். ஆனால், இடம் தெரிந்தாலல்லவா கையும் களவுமாய்க் கண்டுபிடிக்க?—இதற்கிடையில் தனக்கும் கந்தனுக்கும் நடக்கவிருந்த கல்யாணத்தை எப்படியாவது நிறுத்திவிட முயற்சி செய்யும்படி செங்கமலம் ஒவ்வொரு நாளும் என்னை நச்சரித்துக் கொண்டிருந்தாள். நீயும் எதிர்பாராத விதமாக ஊரிலிருந்து திரும்பி வந்து விடவே, நேற்றிரவு எப்படியாவது கந்தனின் திருட்டுத் தனத்தைக் கண்டுபிடிப்பது என்று தீர்மானித்து ஊர் பூராவும் சுற்றியலைந்தேன். கடைசியில் ஆற்றங்கரை மடத்தில் அவனைக் கண்டேன். அவ்வளவுதான்; உடனே அதிகாரிகளுக்குத் தகவல் கொடுத்தேன். அவர்கள் வந்து அவனைக் கையும் கள்ளச் சாராயமுமாகக் கைது செய்தார்கள். அவன் கைதானது ஊருக்கும் நல்லதாயிற்று; உங்களுக்குக்கும் நல்லதாயிற்று!"

இதைக் கேட்டதும் இருவரும் சிரித்தார்கள். இரண்டு வருஷங்களுக்கு முன்பே நான் அவர்களுக்குச் செய்திருக்க வேண்டிய உதவியை இப்போது செய்துவிட்டதில் எனக்கு ரொம்ப ரொம்பத் திருப்தி.

நமது இலங்கைக் கடிதம்

# மந்திரி கொடுக்கும் கணக்கு

ரஜனி

—கொழும்பு, ஜூலை 3

இலங்கை சர்க்கார் பொக்கிஷ மந்திரி ஸ்ரீ ஆர். ஜயவர்த்தனா இந்திய அரசாங்கத்துக்கும் இந்தியப் பத்திரிகைகளுக்கும் பதில் சொல்லும் தோரணையில் செலாவணிக் கட்டுப்பாடுகளைப் பற்றி நேற்றிரவு ஒரு விரிவான அறிக்கையை விடுத்திருக்கிறார். இலங்கையிலிருக்கும் சுமார் எண்ணாயிரம் பிரிட்டிஷார் 1948-ம் ஆண்டில் பிரிட்டனுக்கு எட்டு கோடி ரூபாய் அனுப்பியிருப்பதாயும், எட்டு லட்சம் இந்தியர்கள் இந்தியாவுக்குப் பத்து கோடி முப்பது லட்சம் ரூபாய் அனுப்பியிருப்பதாயும் மந்திரி கூறுகிறார். இதன்படி ஒரு பிரிட்டிஷ்காரர் சராசரி பத்தாயிரம் ரூபாய் வீதமும், ஒரு இந்தியர் சராசரி நூற்று முப்பது ரூபாய் வீதமும் சென்ற வருடத்தில் அனுப்பியிருக்கிறார்கள். அந்நிய நாடுகளைச் சுரண்டும் பிரிட்டிஷ்காரர்களை இஷ்டம்போல இவ்வளவு பெரும் தொகை அனுப்ப அனுமதித்து, நாட்டின் வளத்துக்கு அரும்பாடு பட்டு உழைக்கும் இந்தியர் மாதத்தில் சராசரி பதினொரு ரூபாய்க்குமேல் அனுப்பக்கூடாது என்று தடுப்பது எவ்விதம் நியாயமாகுமோ தெரியவில்லை. ஐரோப்பியர்களின் தொகை மிகக் குறைவாயிருப்பதாலும், சலுகைகளை அவர்கள் துஷ்பிரயோகம் செய்யும் சந்தர்ப்பம் அதிகமில்லாதபடியினாலும்தான் மாதம் ஐம்பது பவுன் 'பர்மிட்' இல்லாமலே சீமைக்கு அனுப்ப அனுமதி கொடுக்கப்பட்டுள்ளதாம். ஆனால் இந்தியர்கள் விஷயத்தில் அப்படி நினைப்பதற்கில்லையாம்.

அயல் தேச மூலதனத்தை நம்பியிருக்கும் இலங்கையில் மூலதனத்தைப் போட்டு நாட்டை வளப்படுத்திய பிரிட்டிஷாரைப் போல இலங்கையர்களுடன் போட்டியிட்டு இலங்கையரின் பிழைப்பைக் கெடுக்கும் இந்தியர்களை நடத்த முடியுமா என்று கேட்கிறது சிங்களவர்களினால் நடத்தப்படும் ஒரு ஆங்கிலப் பத்திரிகை. பிரிட்டிஷார் போட்ட மூலதனம் ரப்பர், தேயிலைத் தோட்டங்களாக முளைத்துவிடவில்லை; அந்த மூலதனத்துடன் இந்தியர்களின் உழைப்பு இல்லாமலிருந்தால் இலங்கையில் பெரும் பகுதி இன்னமும் அனுராதபுரம் காட்டைப்போலவே இருக்கும் என்பதை அத்தகையோர் சிந்தித்துப் பார்ப்பதில்லை.

## அடிமேல் அடி!

குடும்ப சம்ரட்சணைக்குப் பணமனுப்பும் விஷயத்தில் இந்தியர்களை நிரந்தரவாசிகள், தாற்காலிக வாசிகள் என்று பிரிக்கக் கூடாதென்றும், செலாவணிக் கட்டுப்பாடுகளை அரசியல் நோக்கத்துடன் உபயோகிக்கக் கூடாதென்றும் இந்திய அரசாங்கம் கோரியிருந்தது. இந்தக் கோரிக்கையை இலங்கை அரசாங்கம் ஒப்புக் கொள்ளுவதற்கில்லையென்று மந்திரி ஸ்ரீ ஜயவர்த்தனா அறிவித்திருக்கிறார். அதோடு புதிய சில விதிகளையும் வெளியிட்டிருக்கிறார்:

பணம் அனுப்ப 'பர்மிட்' கேட்கும் பொழுது இந்தியர்கள் முதலில் தாங்கள் இலங்கையின் நிரந்தர வாசிகளா அல்லது தாற்காலிக வாசிகளா என்பதைத் தீர்மானித்துக் கொள்ள வேண்டும். நிரந்தர வாசிகளென்று சொல்லிப் பிரஜா உரிமை கோரினால் இலங்கையிலிருந்து ஒரு சதம்கூட அனுப்புவதற்கு அனுமதிக்க முடியாது. தாற்காலிக வாசியென்று சொன்னால் இந்தியாவில் குடும்பம் இருப்பதைக் கலெக்டர் சர்ட்டிபிகேட் மூலம் ருசுப்படுத்தி வருமானத்தில் மூன்றில் ஒரு பங்கை இந்தியாவுக்கு அனுப்பலாம். கட்டுப்பாடு அமுலுக்கு வந்த பிறகும் இனிப் புதிதாகவும் இலங்கைக்கு வருகிறவர்கள் குடும்பத்துடன் இலங்கைக்கு வர வேண்டும். அவர்கள் குடும்ப சம்ரட்சணத்துக்காக இந்தியாவுக்குப் பணம் அனுப்புவதை அனுமதிக்கவே முடியாது — இவைதான் மந்திரி ஸ்ரீ ஜயவர்த்தனா வெளியிட்டுள்ள புதிய விதிகளாகும்.

இந்தப் புதிய விதிகளைக் குடியேற்ற வெளியேற்றக் கட்டுப்பாடு சட்டத்துடன் சேர்த்துப் பார்த்தால் அவற்றின் பயங்கரமான தன்மை வெளியாகும். அதாவது மேற்படி விதிகளும் செலாவணிக் கட்டுப்பாடும் இரண்டு மூன்று வருடங்களில் இந்தியர்களை இலங்கையிலிருந்து அடியோடு



*ராமன்* (தன் நண்பனிடம் பரீட்சை யெல்லாம் முடிந்த பிறகு) :— நான் நாலாம் பாரத்தில் கட்டாயம் இந்த வருஷம் பாஸ் செய்து விடுவேன். அதற்காக மூன்று மாதங்கள் கஷ்டப் பட்டிருக்கிறேன்!

*நண்பன்* :— இதிலென்ன ஆச்சரியம்! மூன்று மாசமாக அப்படியே எல்லாப் பாடங்களையும் உருத் தட்டி யிருப்பாய் இல்லையா?

*ராமன்* :— அப்படி இல்லை. மூன்று மாசமாக நம் வாத்தியார் வீட்டுக்குச் சென்று வாத்தியார் வீட்டு அம்மாள் சொன்ன காரியங்களைச் செய்தேன்!

---

விரட்டிவிடச் செய்திருக்கும் ஒரு சூழ்ச்சியே என்பதில் இனி சந்தேகத்துக்கு இடமில்லை.

'பர்மிட்' இல்லாமல் இந்தியாவுக்கு மாதம் இருபத்தைந்து ரூபாய் அனுப்பும் உரிமை இப்போது சில இந்தியர்களுக்கு இருந்து வருகிறது. அந்த உரிமையையும் ரத்து செய்யப் போவதாகப் பொக்குவரத்து மந்திரி கூறியிருப்பது, இந்திய சமூகத்துக்கு அடிமேல் அடி கொடுப்பதாக இருக்கிறது!

## யாழ்ப்பாண மேயர் யோசனை

**யா**ழ்ப்பாண நகர மேயர் ஸ்ரீ ஸாம். ஏ. சபாபதி யாழ்ப்பாண மக்களுக்குக் கீழ் வருமாறு ஒரு யோசனை கூறியிருக்கிறார் :

"ஒவ்வொரு வருடமும் மகாத்மா காந்தியின் சிராத்த தினத்தைத் தாய்மார்கள் தினமாகக் கொண்டாட வேண்டுமென்று சுகாதார அதிகாரி டாக்டர் பி. ராஜலிங்கம் சொல்லிய யோசனை வரவேற்கத் தக்கது. காந்திஜியின் சிராத்த தினத்தன்று கோவில்களிலும் மருந்தகங்களிலும் கடைகளிலும் உண்டியல்களை வைத்துப் பணம் வசூல் செய்து அதைக் கர்ப்பிணிகள், குழந்தைகள் ஆகியோரின் நன்மைக்காக உபயோகிக்க வேண்டும். சிசு சம்ரக்ஷணமும் கர்ப்பிணிகளை ஆதரித்தலும் மகாத்மாவின் ஆன்மாவுக்குச் சாந்தி தருவதாயிருக்கும். இது மகாத்மாவுக்குச் சிறந்த ஞாபகச் சின்னமாக இருக்கும்" என்று யாழ்ப்பாண சுகாதாரச் சங்கத்தின் ஜூபிலிக் கமிட்டி விழாவில் அவர் பேசியபொழுது குறிப்பிட்டார். மேயரின் யோசனையைக் கூட்டம் ஏகமனதாக ஆமோதித்தது. எனவே, இனி ஒவ்வொரு வருடமும் காந்திஜியின் சிராத்த தினம் யாழ்ப்பாணத்தில் "தாய்மார் தின"மாக அனுஷ்டிக்கப்படும்.

## காட்டில் புதையல்

**சி**ங்கள ராஜாக்களின் பழைய தலைநகரான அநுராதபுரத்துக்கு அருகிலுள்ள பொலன்னருவைக் காடு பல அற்புதங்களை இப்பொழுது வெளிப்படுத்தி யிருக்கிறது. அங்கு அரசாங்கப் புதைபொருள் ஆராய்ச்சி நிபுணர்கள் ஆராய்ச்சிகள் நடத்தியபொழுது சுமார் எட்டு அல்லது ஒன்பது நூற்றாண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட ஒரு புராதனச் சிவன் கோவில் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. இந்தச் சிவன் கோவிலின் பக்கத்திலுள்ள பௌத்த ஆலயங்களும் இதர பௌத்தச் சின்னங்களும் இடிந்து பாழடைந்த நிலைமையிலிருக்க, சிவன் கோவிலும் அதன் சிகரமும் சிறிதுகூடச் சேதமடையாமல் புத்தம் புதிய நிலைமையிலிருப்பது ஆராய்ச்சியாளர்களுக்கு ஆச்சரியத்தைக் கொடுத்திருக்கிறது. பழங்காலச் சிங்கள மன்னர்கள் பெரும்பாலும் தென்னிந்திய ராஜகுமாரிகளையே மணந்து கொண்டிருந்தார்கள். இந்திய ராஜகுமாரிகள் வழிபடுவதற்காகப் பிரத்யேகமாகச் சிங்கள மன்னர்கள் இந்தக் கோவிலைக் கட்டிக் கொடுத்ததாக அங்குள்ள சிலாசாஸனங்களிலிருந்து தெரிய வருகிறது. சிவநேயர்கள் சென்ற வாரம் இந்தக் கோவிலுக்குச் சென்று 800 வருடங்களுக்குப் பின் முதல் தடவையாகப் பூஜை நடத்தினார்கள். கூடிய சீக்கிரம் இந்தக் கோவிலுக்குக் கும்பாபிஷேகம் நடத்தவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன.

# அரண்மனைத் திருடன்

விஜயம்

அரண்மனையில் திருட்டுப் போய் விட்டது என்ற செய்தி அரண்மனை வேலைக்காரர்களை யெல்லாம் ஒரே திகிலில் ஆழ்த்திவிட்டது. எல்லோரும் பரபரப்புடன் இருந்தனர். அரசனுக்கு அன்று வந்த கோபம் எல்லோரையும் நடுங்கச் செய்துவிட்டது. அதுவும் அரண்மனையில் நடந்த திருட்டு சாதாரணத் திருட்டா? இல்லை. அரசன் அணியும் ஆபரணங்களல்லவா திருட்டுப் போய்விட்டன! படுக்கப் போகும்போது அரசன் ஆபரணங்களை யெல்லாம் கழற்றிப் பத்திரமாகப் பெட்டியில் வைத்தான். காலையில் எழுந்து அரசன் சபா மண்டபத்துக்குப் போகும்போது வழக்கம்போல் ஆபரணங்களை அணிவதற்குப் பெட்டியைத் திறந்தான். பெட்டி காலியாயிருந்தது. தான் அணியும் நகைகளைத் திருடும் அளவுக்குத் துணிவுள்ள திருடன் தன் நாட்டில் இருக்கமுடியும் என்று அரசனால் நம்பவே முடியவில்லை. அரண்மனை வேலைக்காரர்களையெல்லாம் மிரட்டி, சோதனை செய்து பார்த்தும் பலனில்லை. அரசனுக்கு ஆபரணங்கள் களவு போனதுகூட அவ்வளவு வருத்தமாய்த் தோன்றவில்லை. ஆபரணங்கள் சுலபமாய் வேறு செய்துகொண்டு விடலாம். ஆனால், அரண்மனையிலேயே—அதுவும் அரசன் நகைகளிலேயே—கை வைக்கும் அளவுக்குத் துணிவு கொண்டுள்ள அந்தப் பக்காத் திருடனை எப்படியாவது கண்டுபிடிக்க வேண்டுமே என்னும் வருத்தம்தான் அதிகமாயிருந்தது.

போலீஸ் இலாக்கா எவ்வளவோ சுறுசுறுப்பாக முனைந்தும் திருடன் அகப்படுகிற வழியாயில்லை. அரசன் மிகவும் கவலையுடன் இருந்தான்.

அன்று அரசன் சபா மண்டபத்துக்கு வந்து அமர்ந்த சற்று நேரத்துக்கெல்லாம் ஓர் ஏழைச் சிறுவன் கந்தலான உடைகளை அணிந்துகொண்டு, அரசனைக் காணவேண்டும் என்று சொல்லிக் காவலாளர்களைக் கெஞ்சினான். முதலில் அவர்கள் அவனை உள்ளே விட மறுத்தனர். அரண்மனையில் நகைகள் திருட்டுப்போன விஷயமாகத் தான் அரசனைக் காண விரும்புவதாக அவன் தெரிவித்தான். கடைசியில் அவர்கள் சம்மதித்து அவனை அரசனிடம் அனுப்பிவைத்தனர்.

அரசனுக்கு அந்தச் சிறுவனைக் கண்டதும் ஆச்சரியமாய்ப் போய்விட்டது. "பையா, இந்தத் திருட்டு சம்பந்தமாக உன்னால் என்ன கண்டு பிடிக்க முடியும்? அரண்மனையில் நடந்த திருட்டு மிகவும் துணிகரமான திருட்டு. போலீஸ்காரர்களே ஒன்றும் புரியாமல் தவிக்கிறார்களே!" என்றான் அரசன்.

"மகாராஜா, நான் திருடனைக் கண்டுபிடித்து விட்டேன். அவனை ஒரு இடத்தில் பத்திரமாக வைத்திருக்கிறேன். மகாராஜாவே நேரில் வந்தால்

---

## அரை டிக்கெட்!



பையன் (நாடகக் கொட்டகையில்):—ஸார்! எனக்கு ஒரு அரை டிக்கெட் கொடுங்கள்!

டிக்கெட் விற்பவர்:—நீ பெரிய பையனாயிருக்கிறாயே! முழு டிக்கெட்டுத்தான் வாங்கவேணும்.

பையன்:—நான் பாதி நாடகத்தில் தூங்கி விடுவேன்! அதனால்தான் அரை டிக்கெட் கேட்கிறேன்.



என்று கூறிவிட்டு மேலே ஏற முடியாமல் தவித்தான். அரசன் தன் பக்கத்திலிருந்த வீரனிடம் அவனை உடனே கிணற்றை விட்டு வெளியேற்றும்படி உத்தர விட்டான். அந்த வீரன் நீண்ட கயிற்றின் உதவியைக் கொண்டு திருடனை வெளியேற்றினான். வெளியேறிய திருடன், தன் மடியில் கட்டிக் கொண்டிருந்த விலை உயர்ந்த ஆபணங்களை யெல்லாம் எடுத்து அரசன் எதிரில் வைத்தான். அரசனுக்கு ஒரே ஆச்சரியமாய்ப் போய் விட்டது. அவ்வளவும் அரசன் அணியும் ஆபரணங்கள் தான்! அடுத்த நிமிஷம் அரசன் முகத்தில் பயங்கரமான கோபக் குறி தாண்டவமாடியது. உடனே தன் உடைவாளை உருவினான் அவன். அந்தச் சமயம் சிறுவன் அரசனை நெருங்கி, "மகாராஜா, இந்தத் திருடனுக்குத் தாங்கள் உயிர்ப் பிச்சை அளிக்க வேண்டும். இவர் என் தகப்பனார்......!" என்று நடுங்கும் குரலில் சொல்லிக் கண்ணீர் விட்டான்.

அவனை அரண்மனை நகைகளுடன் பார்க்கலாம். தயவு செய்து தாங்கள் மட்டும் வரவேண்டும்!" என்று அந்தப் பையன் அரசனை மிகவும் வணக்கத்துடன் கேட்டுக் கொண்டான்.

அரசன் ஒரு விநாடி யோசித்தான். 'ஏழைச் சிறுவனுடன் மகாராஜா போவதா!' என்று அவன் மனம் அவனை ஏளனம் செய்தது. ஆனால் திருடனைக் கைப்பிடியாகப் பிடிக்கப் போகிறோம் என்னும் எண்ணம் அரசனை அந்தச் சிறுவனுடன் போகத் தூண்டியது. அரசன் ஒரு வீரனை மட்டும் அழைத்துக் கொண்டு சிறுவனைத் தொடர்ந்து சென்றான். ஊரின் எல்லையைத் தாண்டிக் கொஞ்ச தூரம் சென்றதும் அங்கு ஒரு கிணறு இருந்தது.

பையன் எல்லோருக்கும் முன்னதாக அந்தக் கிணற்றுக்கு அருகே சென்று "மகாராஜா, இதோ இந்தக் கிணற்றுக் குள்ளே இருக்கிறான், திருடன்!" என்று உற்சாகத்துடன் சொன்னான். அரசனும் வீரனும் கிணற்றுக்குள் எட்டிப் பார்த்தார்கள். உண்மையிலேயே திருடன் உள்ளே முழுகி எழுந்து கொண்டிருந்தான். திருடன் 'ஜில்' என்னும் கிணற்று ஜலத்தில் இருந்தாலும், அரசனைப் பார்த்ததும், பயத்தினால் அவன் உடம்பு முழுவதும் 'குப்'பென்று வியர்த்துவிட்டது.

"மகாராஜா, அரண்மனையில் துணிந்து திருடியவன் நான்தான்!"

அரசனுக்கு வந்த கோபம் போய் விட்டது. ஆச்சரியம் தாங்கவில்லை. சிறுவனுடைய நேர்மையான குணம் அவனைப் பெரிதும் வசீகரித்துவிட்டது.

"நீ சின்னப் பையனாக இருந்த போதிலும் குணத்தில் எல்லோருக்கும் பெரியவனாக விளங்குகிறாய். திருடினவன் உன் தகப்பன் என்று தெரிந்தும் அவனைக் காட்டிக் கொடுத்தாய்! உன் குடும்பம் சொல்ல முடியாத வறுமையில் உழலுவதனால்தான் உன் தகப்பன் இந்தக் காரியத்தில் இறங்கியிருக்கிறான் என்று தெரிகிறது. உனக்கு அரண்மனையிலேயே ஒரு வேலை தருகிறேன். உன் தகப்பன் தான் செய்த இழிவான காரியத்தை உணர்ந்து மனப்பூர்வமாக மன்னிப்புக் கேட்கிறபடியினால் அவனுக்கும் மன்னிப்பு அளித்து, சிறைச்சாலையிலேயே ஒரு உத்தியோகம் தருகிறேன்!" என்று அரசன் சந்தோஷத்துடன் கூறினான். பையனும் அவன் தகப்பனும் அடைந்த ஆனந்தத்துக்கு அளவே இல்லை.

# அத்திக்காய் அமிர்தம்

கோமதி சுப்பிரமணியம்

“வெள்ளிக்கிழமை நடக்க இருக்கும் நிகழ்ச்சியை நீ அவசியம் கேட்க வேண்டும்” என்பதாக என் பால்ய சகி கடிதம் எழுதியிருந்தாள்.

என் சகி ரொம்பப் படித்தவள் அல்ல; படித்தவள் போலப் பாசாங்கு செய்கிறவள். அவள் எந்த இடத்திலும் எந்த விஷயத்தைப் பற்றியும் பேசுவாள். ஆயினும் ரேடியோவில் என்ன பேசப் போகிறாளோ என்று நான் ஆச்சரியப்பட்டேன்.

“அவசியத் தேவை” என்ற பெருந்தலைப்பில் “புது முறைப் பட்சணம்” என்று ஒரு உப தலைப்புக் குறிப்பிட்டு, பட்சணத்திற்குப் பெயர் “அத்திக்காய் அமிர்தம்” என்றும் குறிப்பிட்டிருந்தார்கள். எங்கள் வீட்டுக் கொல்லையில் பெரிய தோட்டம். தோட்டத்தில் பாதி அத்தி மரங்கள். அதனால் “அத்திக்காய் அமிர்தம்” எப்படிச் செய்வது என்பதைத் தெரிந்து கொள்ள நான் அந்த நிகழ்ச்சியை ஆவலோடு எதிர்பார்த்தேன்.

“அத்திக்காய் அமிர்தம்” “வானொலி”யில் வந்தது. இத்தனை மணிக்கு இன்னார் பேசுகிறார்கள் என்று ருசி காட்டினார்கள்; குறித்து வைத்துக்கொள்ளவும் சொன்னார்கள். இவர்களுக்கு முன்னதாகவே தான் என் சகி குறித்து எழுதிவிட்டாளே!

குறிப்பிட்ட நாளும் வந்தது. நான் அடுப்பை மூட்டி வாணலியை அடுப்பில் போட்டு, காம்பு அரிந்த மிளகாய், இருத்தப்பட்ட வெங்காயம், சுத்தமான நெய், கழுவி எடுக்கப்பட்ட ஒரு கூடை அத்திக்காய் முதலானவை புடை சூழ, அரிவாள் மணை அருகே இருக்க, ரேடியோவுக்கு முன்னால் உட்கார்ந்தேன். ரேடியோவில் பக்ஷணங்கள் செய்யும் முறையைச் சொல்லச் சொல்லக் கூடக்கூட அதைச் செய்து பார்த்து விடுவது என் வழக்கம். பக்ஷணக் குறிப்புகளில் பலக் கணக்கில் சாமான் போடச் சொல்லுவதால், நான் நிறுத்து கொண்டு விறுக்கப்பட்ட கடைச் சாமான்களாகவே பலக் கணக்கில் கட்டுக்கட்டாக வாங்கி வைத்துக் கொண்டு ரேடியோ கேட்பது வழக்கம்.

அத்திக்காய் அமிர்தம் நிகழ்ச்சி ஆரம்பித்தது. வாணலியை எடுத்து வைத்துக் கொள்ளச் சொன்னாள் என் சிநேகிதி. எடுத்தேன்; அடுப்பில் போட்டேன். காம்பு அரிந்த சுத்தமாக்கப்பட்ட அத்திக்காய் ஒரு படி எடுத்து வாணலியில் தட்டச் சொன்னாள்; உடனே நடந்தது. இப்படி சொல்லச் சொல்ல நான் செய்து கொண்டே வந்தேன்.

“இன்னும் ஒரு பலம் பெருங்காயம்” என்றாள்; உடனே ஒரு பலம் பாக்கெட் பெருங்காயத்தை எடுத்துப் போட்டேன்.

“இன்னும் ஒரு பலம் பெருங்காயம்...”

மீண்டும் ஒரு பலம் பெருங்காயம் போட்டேன். இன்னும் ஒரு பலம் பெருங்காயம், இன்னும் ஒரு பலம் பெருங்காயம், இன்னும் ஒரு பலம் பெருங்காயம், இன்னும் ஒருபலம் பெருங்காயம், இன்னும் ஒரு பலம் பெருங்காயம், இன்னும்......

சொல்லச் சொல்லப் பெருங்காயத்தை எடுத்துப் போட்டுக் கொண்டே இருந்தேன். ஒரு குரோஸ் பெருங்காயம்—அதாவது. ஒரு பலம் பாக்கெட்டுகள் 144 போட்டாயிற்று! என் கை அயர்ந்தது. வாணலிக்கு மேலாகப் பெருங்காயக் குழம்பிற்குள் அத்திக்காய் கொம்மாளம் போட்டது. தயாரிப்பது பெருங்காய அமிர்தமா அல்லது அத்திக்காய் அமிர்தமா என்று எனக்குத் தெரியவில்லை. இந்தக் குழப்பத்தில் என் கவனம் திரும்பிவிட்டதால் மேலே ரேடியோ பெட்டியில் என்ன சொன்னார்கள் என்றே புரியவில்லை.

இரண்டு நிமிஷத்திற்குப் பிறகு “இந்த அத்திக்காய் அமிர்தத்தைச் செய்து

பார்த்தீர்களா? இது பற்றிய தங்கள் அபிப்பிராயத்தை வரவேற்கிறோம்'' என்று மெல்லிய குரல் ஒன்று சொல்லிற்று. ரேடியோவைத் திருகி விட்டு, வாணலியை இறக்கி அத்திக்காய் அமிர்தத்தைச் சடசட எடுத்தேன். தெரு முழுக்க ஒரே நாற்றம்! சட்டியை விட்டு அமிர்தம் வரவில்லை. வீட்டிலுள்ள எல்லாரும் இரு பகுதிகளாகப் பிரிந்து 'டக்—அப்—வார்' இழுப்பார்களே, அந்தக் கணக்கில் சட்டியை ஒரு சாராரும் அமிர்தத்தை ஒரு சாராரும் நின்று இழுத்தோம். பலன் இல்லை! அத்திக்காய் அமிர்தம் சட்டியோடு இருந்துவிட்டது. அகப்பையில் வரவில்லை. சட்டியில் இருந்தும் அகப்பையில் வராத அத்திக்காய் அமிர்தத்தின் பெருமையே பெருமை!

ரேடியோக்காரர்கள் நேயர்களுடைய அபிப்பிராயத்தைக் கேட்டதால் மறு நாளே நான் என்னுடைய அபிப்பிராயத்தை எழுதினேன்.

"தாங்கள் ஒலி பரப்பிய அத்திக்காய் அமிர்தம் ரிஜிஸ்தர் தபாலில் அனுப்பப் பட்டிருக்கிறது. அத்திக்காய் அமிர்தத்திலிருந்து வாணலியைப் பிரித்து எடுக்க முடியவில்லையாதலால் அதையும் சேர்த்தே அனுப்பியிருக்கிறோம். தயவு செய்து வாணலியைப் பிரித்தெடுத்து அனுப்பவும். 'இன்னும் ஒரு பலம் பெருங்காயம், இன்னும் ஒரு பலம் பெருங்காயம்...' என்று ஒலி பெருக்கினீர்களே, அத்திக்காய் அமிர்தம் தயாரிக்க மொத்தம் எத்தனை பலம் பெருங்காயம் தேவை என்று சொன்னீர்களா? நான் போட்டிருப்பது மொத்தம் 144 பலம்!''

ரிஜிஸ்தர் தபாலில் "அத்திக்காய் அமிர்தம்'' போய்ச் சேர்ந்தது. மறு வாரத்தில் பதிலும் வந்தது.

"வருந்துகிறோம். அந்தப் பக்ஷணக் குறிப்பைப் பேச இருந்த அம்மணி சில காரணங்களை முன்னிட்டு நிலையத்திற்கு அந்தத் தேதியில் வர இயலாமற் போனதின் காரணமாக, அவரது பேச்சை முன் கூட்டியே ஒலிப்பதிவு செய்திருந்தோம். அன்று தாங்கள் கேட்டது அவரது ஒலிப்பதிவு. அதில் கீறல் விழுந்திருந்ததால் 'இன்னும் ஒரு பலம், இன்னும் ஒரு பலம்......' என்று சொல்லியிருக்கிறது. அத்திக்காய் அமிர்தத்துக்குப் போட வேண்டிய பெருங்காய அளவு ஒரே ஒரு பலம்தான்; 144 பலம் அல்ல!

அடடே! ஒலிப்பதிவில் கீறல் விழுந்ததின் கோளாறு இது? இதனால் வாணலி இழந்த தமிழ் பேசும் குடும்பங்கள் இந்தப் பூவுலகில் எத்தனை எத்தனையோ!

---

# காலக்ஷேபம்

## எப்படி?

மானேஜர்:—நீ ரொம்பச் சின்னப் பையனாயிருக்கிறாய். இன்னும் கொஞ்சம் வயதான பையனாகத்தான் எங்கள் வேலைக்கு வேண்டும்.

பையன்:—அப்படியானால் இன்னும் ஒரு வாரம் கழித்து வந்து உங்களைப் பார்க்கட்டுமா, ஸார்!

✱

## பரவாயில்லை!

"ராமநாதன் வேறு ஜாகைக்கு மாறி விட்டாரா?''

"இல்லை; சமீபத்தில் மாறுவார் என்று எனக்குத் தோன்றவில்லை.''

"ஏன்?''

"அவருக்கு ஒரு அச்சாபீஸிலே இனாமாக அவர் விலாசம் அடித்த கார்டுகள் கொடுத்தார்களாம். அதெல்லாம் தீர்ந்து போகிறமட்டும் அவர் தம்முடைய ஜாகையை விட்டு மாறமாட்டாராம்!''

## ஒரு வார்த்தை!

"நான் உனக்கு வேலை செய்துவைக்கப் போவது பற்றி ஒருவரிடமும் பிரஸ்தாபிக்காதே என்று சொல்லியிருந்தும், நீ ராஜுவிடம் நேற்றுச் சொல்லிவிட்டாயாமே!''

"ஆமாம், அவன் என்னிடம் 'உனக்கு ஒரு மடையனும் வேலை பண்ணி வைக்கமாட்டான்' என்றான். எனக்குக் கோபம் வந்தது. நீங்கள் ஒருவர் இருக்கிறீர்கள் என்று ஒரு வார்த்தை சொல்லி வைத்தேன்!''

✱

## சரிதான்!

உபாத்தியாயர்:—என்டா பையா, இன்னிக்குப் பாடத்தைப் பத்துத் தரம் எழுதிக் கொண்டு வரச் சொன்னேனே, மூன்று தடவைதானே எழுதிக் கொண்டு வந்திருக்கிறாய்!

பையன்:—எனக்குக் கணக்கும் சரியாகப் போட வராது, ஸார்!

# சுதந்திர மாளிகை



ஜெயமணி

## 10. கவர்னர்கள், மந்திரிகள், சட்டசபைகள்:

குடியரசுத் தலைவரால் ஒவ்வொரு மாகாணத்துக்கும் ஒரு கவர்னர் நியமிக்கப்படுவார். கவர்னர் பதவியின் காலம் ஐந்து வருஷமாகும். எனினும் கவர்னர் தலைவரின் நம்பிக்கையைப் பெற்றிருக்கும் வரையில்தான் பதவியில் இருக்க முடியும்.

கவர்னர் ராஜிநாமா செய்வதாயின், அவர் ராஜிநாமாக் கடிதத்தைக் குடியரசுத் தலைவரிடம் சமர்ப்பிக்க வேண்டும்.

மாகாணத்தின் நிர்வாக அதிகாரம் கவர்னருக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. ஆயினும் கவர்னருக்குக் கீழ்ப்பட்ட எந்த அதிகாரியின் கடமைகளையும் சட்டபூர்வமாக நிர்ணயிக்கப் பார்லிமெண்டுக்கும் மாகாண சட்ட சபைக்கும் அதிகாரமுண்டு.

கவர்னர் பதவிக்கு வருவோர் இந்தியப் பிரஜையாக இருக்கவேண்டும். முப்பத்தைந்து வயது பூர்த்தியானவராக இருக்க வேண்டும். கவர்னர் பார்லிமெண்டு அங்கத்தினராகவோ, மாகாண சட்டசபைகளின் அங்கத்தினராகவோ இருக்கக் கூடாது. அங்கத்தினராக இருப்பவர் கவர்னராக நியமிக்கப் பட்டால், கவர்னர் பதவியை ஏற்கும் தினத்திலிருந்து அவரது அங்கத்தினர் ஸ்தானம் காலியாகும்.

கவர்னர் ஊதியம் பெறும் வேறு எந்தப் பதவியையும் வகிக்கக் கூடாது. சர்க்காரால் கவர்னருக்குத் தனி ஜாகை வசதி அளிக்கப்படும். அவரது சம்பளம், அலவன்ஸ் முதலியவற்றைச் சட்டபூர்வமாக மாகாண சட்டசபைகளே நிர்ணயிக்கும். கவர்னரின் பதவி காலத்தில் அவருடைய சம்பளமோ, அலவன்ஸோ குறைக்கப்படமாட்டாது.

கவர்னர் பதவியேற்கு முன் தாம் குறிப்பிட்ட மாகாண ஜனங்களின் க்ஷேமத்தையே முக்கியமாகக் கொண்டு தமது கடமையைச் செய்வதாகவும், சட்டத்தையும் அரசியல் திட்டத்தையும் பாதுகாப்பதாயும் விசுவாசப் பிரமாணம் செய்ய வேண்டும். அவர் தம்முடைய இஷ்டப்படி கடவுள் பெயரிலோ அல்லது கடவுள் பெயரைக் குறிப்பிடாமலோ விசுவாசப் பிரமாணம் செய்துகொள்ளலாம்.

நெருக்கடி ஏற்படும்போது கவர்னர் பதவியை வகிப்பதற்குற்ற நடவடிக்கைகளைக் கைக்கொள்ளக் குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் உண்டு.

எத்தகைய குற்றம் செய்து தண்டிக்கப் பட்டவராயினும், அவரை மன்னிக்கவோ அவரது தண்டனையை நிறுத்தி வைக்கவோ, குறைக்கவோ கவர்னருக்கு அதிகாரம் உண்டு.

**மந்திரி சபை:** ஒவ்வொரு மாகாணத்திலும் பிரதமரின் தலைமையில் ஒரு மந்திரி சபை அமைக்கப்படும். அவர் சர்க்கார் நிர்வாக விஷயங்களை யொட்டி கவர்னருக்கு ஆலோசனை கூறுவார். எனினும், கவர்னருக்குத் தம்முடைய உசிதப்படி நடந்துகொள்ள அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கும் விஷயங்களை யொட்டி ஆலோசனை கூற மந்திரி சபைக்கு அதிகாரம் இல்லை. ஒரு குறிப்பிட்ட விஷயம் கவர்னரின் சொந்த அதிகாரத்துக்கு உட்பட்டதா அல்லவா என்ற கேள்வி எழுமாயின், அதையொட்டி கவர்னரின் தீர்ப்பே முடிவானது.

கவர்னரே பிரதமரை நியமிப்பார். கவர்னரின் நம்பிக்கைக்குப் பாத்திரராக இருக்கும் வரையில்தான் பிரதமரும் மற்ற மந்திரிகளும் பதவியில் இருக்கலாம்.

பிரதமருடைய ஆலோசனையின் மீதே கவர்னர் மற்ற மந்திரிகளை நியமிப்பார். சட்ட சபையில் யாருக்குப் பெரும்பாலோரின் ஆதரவு இருக்கிறது என்பதையும், கூட்டுப் பொறுப்பு முறையையும் மனதில் கொண்டே அவர் மந்திரிகளை நியமிப்பார்.

மந்திரி சபை மாகாண சட்டசபைக்குப் பொறுப்பாளியாக இருக்க வேண்டும்.

ஒரு மந்திரி தொடர்ச்சியாக ஆறு மாத காலத்துக்குச் சட்ட சபை அங்கத்தினராக இராவிடில், அவர் மந்திரி பதவியிலிருந்து விலகிவிட்டதாகக் கருதப்படுவார்.

மந்திரிகளின் சம்பளம், அலவன்ஸ் முதலியவற்றை அப்போதைக்கப்போது அந்தந்த மாகாண சட்ட சபைகளே நிர்ணயிக்கும்.

சர்க்கார் நிர்வாக விஷயமாக மந்திரி சபை செய்யும் சகல முடிவுகளையும் பிரதமர் கவர்னருக்கு அறிவிக்க வேண்டும். அவைகள் சம்பந்தமாக கவர்னர் கேட்கும் எந்தத் தகவலையும் பிரதமர் அவரிடம் சமர்ப்பிக்கவேண்டும்.

மந்திரி சபையைக் கலந்து ஆலோசிக்காமலே ஒரு மந்திரி செய்துள்ள முடிவை, மந்திரி சபையின் ஆலோசனைக்கு விடும்

படி பிரதம மந்திரியிடம் கூற கவர்னருக்கு அதிகாரம் உண்டு.

**மாகாண சட்ட சபைகள்:** மாகாண அசெம்பிளியின் ஆயுட்காலம் ஐந்து வருஷம் என்று நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது. எனினும், நெருக்கடி ஏற்பட்டு அவசரச் சட்டம் அமுலில் இருக்குமாயின், அதன் ஆயுட்காலத்தைப் பார்லிமெண்டு மேற்கொண்டு ஒரு தடவைக்கு ஒரு வருஷத்துக்கு மேற்படாமல் நீடிக்கலாம். எப்படியிருந்தாலும் அவசரச் சட்டம் காலாவதியான பிறகு ஆறு மாதங்களுக்கு மேல் அசெம்பிளியின் ஆயுட்காலத்தை நீடிக்க யாருக்கும் அதிகாரம் இல்லை.

மாகாண கவுன்சிலிலிருந்து இரண்டு வருஷத்துக்கு ஒரு தடவை மூன்றில் ஒரு மடங்கு அங்கத்தினர்கள் விலகுவார்கள். அப்போது அந்த ஸ்தானங்களுக்கு மாத்திரமே தேர்தல் நடைபெறும்.

மாகாண அசெம்பிளி அங்கத்தினரின் குறைந்த பட்ச வயது இருபத்தைந்து என்றும், கவுன்சில் அங்கத்தினரின் குறைந்த பட்ச வயது முப்பது என்றும் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

மாகாண சர்க்கார் நடவடிக்கைகள் யாவும் கவர்னரின் பெயராலேயே நடைபெற வேண்டும்.

மாகாண சட்டசபைகள் குறைந்த பட்சம் வருஷத்துக்கு இரண்டு தடவையாவது கூட வேண்டும். கவர்னர் தமக்கு உசிதமாகத் தோன்றும் இடத்தில் அப்போதைக்கப்போது சட்டசபைகளைக் கூட்டலாம். கூட்டங்களை முடிக்கவும், அசெம்பிளியைக் கலைக்கவும் கவர்னருக்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது.

மாகாண சட்டசபைகளைக் கூட்டிப் பேசவும் அவைகளுக்குச் செய்திகள் அனுப்பவும் கவர்னருக்கு அதிகாரம் உண்டு. அந்தச் செய்தியில் கண்ட விஷயத்தை மேற்படி சபைகள் தாமதமின்றி ஆலோசனைக்கு எடுத்துக் கொள்ள வேண்டும். ஒவ்வொரு தடவையும் சட்டசபை ஆரம்பமாகும் போது, மேற்படி கூட்டம் எதற்காகக் கூட்டப்படுகிறது என்பதை அறிவித்து கவர்னர் பேசுவார்.

ஒவ்வொரு அசெம்பிளியும் அதன் அங்கத்தினர்களில் ஒருவரைச் சபாநாயகராகவும் மற்றொருவரை உதவி சபாநாயகராகவும் தேர்ந்தெடுக்க வேண்டும்.

சபாநாயகர் உதவி சபாநாயகரிடமும், உதவி சபாநாயகர் சபாநாயகரிடமும் தங்களுடைய ராஜிநாமாக் கடிதத்தைச் சமர்ப்பிக்கலாம்.

திறமையின்மை அல்லது சபையினரின் நம்பிக்கையின்மை காரணமாக அவர்களைப் பதவியிலிருந்து விலக்குவதாயின், சபையில் ஆஜராகியுள்ள அங்கத்தினர்களில் பெரும்பாலோர் அவ்வாறு ஒரு தீர்மானத்தை நிறைவேற்ற வேண்டும். அத்தகைய தீர்மானம் கொண்டுவரப் போவதாகக் குறைந்தபட்சம் பதினாலு நாட்களுக்கு முன்னதாகவே நோட்டீஸ் கொடுக்க வேண்டும்.

அசெம்பிளி கலைக்கப்பட்டாலும் கூட, அடுத்த அசெம்பிளியின் முதலாவது கூட்டம் வரையில் சபாநாயகர் தமது பதவியிலிருந்து விலகமாட்டார்.

சபாநாயகர் பதவி காலியாக இருந்தால், அவரது கடமைகளை உதவி சபாநாயகர் கவனித்து வருவார். உதவி சபாநாயகர் பதவி காலியாயிருக்குமாயின், கவர்னர் அப் பதவிக்குச் சபையிலுள்ள அங்கத்தினர்களில் ஒருவரை நியமிப்பார்.

கவுன்சில் அக்ராசனர், உப அக்ராசனர் தேர்தல் சம்பந்தமாகவும் சபாநாயகர் உதவி சபாநாயகர் தேர்தல் சம்பந்தமான விதிகளே அனுஷ்டிக்கப்படும்.

பார்லிமெண்டு அங்கத்தினருக்குள்ள யோக்கியதாம்சங்கள் மாகாண சட்டசபை அங்கத்தினருக்கும் இருக்கவேண்டும்.



## கௌரவ மாஜிஸ்ட்ரேட்

•

செங்கற்பட்டு ஜில்லா, பொன்னேரி தாலூகாவில் கௌரவ மாஜிஸ்ட்ரேட்டாக இருந்த நந்தியம்பாக்கம் சுரோத்திரியம்தார் ஸ்ரீ சி. திருவேங்கட முதலியார் அவர்கள் சென்னை கௌரவ மாஜிஸ்ட்ரேட்டாக நியமிக்கப் பட்டிருக்கிறார்.

# பிரதி பிம்பம்

கே. ஏ. அப்பாஸ்





மொழிபெயர்ப்பு: கே. கணேஷ்

நாட்டியக்காரி ராதா அப்பொழுது மிக்க மகிழ்ச்சியுடன் விளங்கினாள். அன்று தீபாவளி நாளானதால் மற்ற நாட்களைவிடத் தன் நாட்டியக் கச்சேரிக்கு அதிகமான பேர் கூடுவார்கள் என்று எதிர் பார்த்தாள். மேலும் அன்று நல்ல வருமானம் கிடைக்கும் என்று நினைத்தாள். அன்றைக்கென விசேஷமாகப் புதிய பூஜா நாட்டிய மொன்றும் தயாரித்திருந்தாள். அவளது அமைப்பான பாதங்களில் சிறு சதங்கைகளைக் கட்டிக் கொண்டிருந்த பொழுது அன்று இரவு தான் பாட நினைத்திருந்த பாட்டை வாயால் முணுமுணுத்துக் கொண்டிருந்தாள். அடுத்த அறையில் ஒத்திகை நடத்திக் கொண்டிருந்த பக்க வாத்தியக்காரர்களின் இன்னிசைக் கேற்ப அவள் பாதங்கள் தாளம் போட்டன.

"ராதா, ராதா" என்று கூவிக்கொண்டே வாத்தியார் ஓடி வந்து அறைக்குள் நுழைந்தார். நுழைந்து பெருமூச்சு விட்டுக் கொண்டு அவர் நின்றிருந்தது ஒரு எட்டுக்கு இரண்டு படிகள் வீதம் அவர் ஓடி வந்திருக்க வேண்டும்போல் தோன்றியது.

"என்ன விசேஷம், வாத்தியாரையா?" என்று ராதா சிரித்துக்கொண்டே கேட்டாள். தன் சிறு குழந்தைப் பருவத்தி லிருந்தே அடி எடுத்து ஆடவும் பாடவும் பழக்கிய இக் கிழ வித்வான்மீது அவளுக்குத் தனியான பிரியம் உண்டு. ஆதி முதல் அவளுக்கு நண்பனாகவும், ஆசானாகவும், இன்னும் பல விதங்களிலும் அவர் உதவி செய்து வந்திருக்கிறார்.

பெருமூச்சை அடக்கிக் கொண்டே "ராதா, நமக்கு நல்ல அதிர்ஷ்டம், நல்ல கௌரவம் கிட்டியுள்ளது. உன்னுடைய நாட்டியத்தைப் பார்க்க ஜலபுரி மகாராஜா தாமே விஜயம் செய்யப்போகிறார்" என்று களிப்புடன் கூறிக் கையைப் பிசைந்து கொண்டே நின்றார்.

சந்தர்ப்பத்தின் விசேஷத்தை அறிந்த ராதா "ஓ, அப்படியா? உங்கள் ராஜா சாகிபைப் பற்றி வேறு ஏதாவது கூறுங்களேன். அவருக்கு வயது ரொம்ப ஆகியிருக்குமோ?" என்று கேட்டாள்.

"வயதா?" என்று சிறிது அலட்சிய பாவத்துடன், ஏதோ வயதைப்பற்றிப் பேசத் தனக்கு மட்டுமே உரிமை என்று எண்ணுவதுபோல் "ஏன் அவர் தகப்பனார், காலஞ்சென்ற ராஜாசாகிப், தன் மகன் பிறந்த நாளில் ஏற்பாடு செய்த நாட்டியக் கச்சேரி ஏதோ நேற்று நடந்த மாதிரி இருக்கிறதே. அவருக்குக் கூட இருந்தால் இருபத்தைந்து வயது இருக்கும். ஐந்து வருஷங்களுக்கு முன்னர்தான் அவருக்குக் கல்யாணம் ஆயிற்று. அடே அப்பா, என்ன பிரமாதமான கல்யாணம்! கல்யாணம் என்

னால் அது கல்யாணம்!" இவ்வாறு கூறிய போது கிழவரின் கண்கள் ஒரு புது ஒளி பெற்றன....... "பாவம், உன் அம்மா கூட அங்கு ஆடப் போயிருந்தாள். அப்பொழுது நீ ரொம்பச் சின்னப் பெண்......" என்று சொல்லிக்கொண்டு வந்தபோது, வாத்தியார் தான் செய்த தவறை உணர்ந்து பாதி வாக்கியத்தில் நிறுத்திக் கொண்டார்.

அவளுடைய தாயைப் பற்றி ஒரு வார்த்தை கூட அவர் கூறியிருக்கக் கூடாது. தாய் இறந்த துக்கத்தை மறக்க ராதாவுக்கு ஒரு ஆண்டுக்கு மேலாகியது. அம்மாவைப்பற்றிக் கூறிவிட்டால் அவளுக்கு அழுகை பொத்துக் கொண்டு வந்துவிடும்.

"இந்தா, இந்தா அ......அ......அழாதே அம்மா!" என்று கிழவர் சங்கடத்துடன் குழறினார். "இன்றைய இரவு, இந்தச் சந்தர்ப்பத்தில் நான் இதைச் சொல்லியிருக்கக் கூடாது. இப்பொழுது கண்ணைத் துடைத்துக் கொண்டு அலங்காரம் செய்துகொள்" என்றார்.

ஒரு வாத்தியக்காரன் அறைக்குள் லேசாகத் தலையை நீட்டி மெதுவான குரலில் "சீக்கிரம், ராஜா சாஹிப் வந்துகொண்டிருக்கிறார்" என்றான். ராதா அழுகையை அடக்கிக்கொண்டு கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். தாயை நினைத்து அழுவதற்கு ஏற்ற சந்தர்ப்பமல்லவே இது! 'நர்த்தகிக்கும், விபசாரிக்கும் உணர்ச்சியை வெளிப்படுத்த உரிமை ஏது?' என்று தனக்குள்ளே கூறிக் கொண்டு கண்ணாடியில் தனது அழகிய பிரதிபிம்பத்தைப் பார்த்து ஏளனமாகச் சிரித்துக் கொண்டாள்.

• • •

உயரிய ராஜபுத்ர வம்சத்தில் தோன்றிய ஜலபுரி ராஜா கம்பீரத் தோற்றமும் தாராள மனப்பான்மையும் கொண்ட ஆஜானுபாகு. பலரிடையே திண்டில் அமர்ந்து ராதாவின் பூஜா நாட்டியத்தைக் கண்டு களித்துக்கொண்டிருந்த ராஜா, அவள் அழகை அப்படியே பருகி விடுவது போல் கண் கொட்டாது பார்த்துக்கொண்டிருந்தார். அவர் பார்வையின் பொருளை அங்கு சூழ்ந்திருந்தவர்கள் உணர்ந்துகொண்டனர். அறையை விட்டு ஒவ்வொருவராக நகர்ந்தனர். ராதா நடனத்தை முடித்தபொழுது அங்கு ராஜாவைத் தவிர வேறு ஒருவரும் இருக்கவில்லை!

கடைசியில் ராதா தனது இடத்திலமர்ந்ததும் ராஜா "ஆஹா! அற்புதம்!" என்றார், இனிமேலாவது அவளைக் கண்ணாரக் கண்டு களிக்கலாமே என்ற எண்ணத்துடன்.

[illegible] அவர் வசித்த காலத்தில் எத்தனையோ அழகிய பெண்களைக் கண்டிருக்கிறார். இந்த இனத்திலே அவர் காலமும், செலவும் பெரும் பகுதி சென்றிருக்கிறது. அவருடைய சொந்த மனைவிகூட நல்ல அழகி என்று கேள்வி. ஆனால் அங்கு உட்கார்ந்திருந்த பொழுது ராதாவைவிடச் சிறந்த அழகியை அவருடைய கண்கள் பார்க்கவில்லை என்று பட்டது. அழகும் ஜீவனும் நெகிழ்வும் வேறு ஒரு பெண்ணிடமும் தாம் காணவில்லை என அவருக்குப் பட்டது. இனி எப்பொழுதுமே அவர் அம்மாதிரி கூறுவார் என்று எதிர்பார்க்க முடியாவிட்டாலும், அந்த நிமிஷத்தில் ராஜாவுக்கு அம்மாதிரி தோன்றியது.

"கண்ணே, உன் பெயர் என்ன?" என்று ராஜா அன்பு கனிந்த குரலிலே கேட்டார்.

நாணத்துடன் "ராதா" என்று இதழ்களில் புன்னகை தவழப் பதில் கூறினாள்.

"நாமமும் அற்புதமாக வல்லவா இருக்கிறது!" என்று ராஜா எண்ணினார்.

வழக்கப்படி ராதா தாம்பூலம் தயார் செய்து வெள்ளித் தட்டிலே ராஜாவின் முன் நீட்டினாள். ராஜாவும் அதில் ஒன்றை எடுத்துக்கொண்டு தமது செல்வச் சிறப்பைக் காட்டுவதற்காக நூறு ரூபாய் நோட்டை வைத்தார். வணக்கத்துடன் ஏற்றுப் பணிவுடன் அதனை வாத்தியாரிடம் கொடுத்துவிட்டாள்.

ராதாவை ஒத்த பெண்களிடம் பழகிப் பெற்ற அனுபவத்தில் "என்னை உனக்குப் பிடிக்கிறதா, கண்ணே?" என்று யாதொரு சங்கோசமுமின்றி அவள் உட்கார்ந்ததும் கேட்டுவிட்டார்.

நாடகத்தில் தங்கள் பாகத்தை நன்கு உணர்ந்த நடிகர்கள் வெளியேறும் சந்தர்ப்பமறிந்து மறைவதுபோல பக்க வாத்தியக்காரர்கள் அனைவரும் வெளியேறினர்.

செல்வந்தர்கள் இத்தகைய கேள்விகளைக் கேட்டால் நாணத்துடன் பதில் அளிக்கும் முறையை நன்கு பயின்றிருந்த ராதா பட்டும் படாமலும் "விரும்பாமல் என்ன?" என்றாள். பணம் குறைவாய்க் கொடுக்கும் வாடிக்கைக்காரர்களுக்கு அளிக்கப்படும் பதிலோ வேறு விதமாகத்தான் இருக்கும்.

"நீ என்னுடன் வந்து இருப்பாயா?" என்று ஆவலுடன் ராஜா அடுத்த கேள்வியைக் கேட்டார். இதற்கு ராதா பதில் அளிக்கவில்லை. அவள் தனது தொழிலின் பழக்கத்திற்கொப்ப நாணிக் கோணிக்



"எனக்கு ஒரு தடவை ஜுரம் வந்து 105, 110, 120 டிகிரிவரை ஏறிக்கொண்டே போய்விட்டது..."



"நான் சிறு பையனாயிருந்த போது எனக்குப் பெண் கொடுக்கிறேன் என்று ஆயிரம் இரண்டாயிரம் பேர் வந்தார்கள்!"



"மெட்ராஸுக்கு நான் வந்த வருஷத்தில் ஒரு தடவை மூந்நூறு, நானூறு அங்குலம் மழை கொட்டிவிட்டது!"

கொண்டு பதிலுக்கு வாத்தியாரைப் பார்த்து விட்டு அறையை விட்டுச் சென்றான்.

பொருளை நிச்சயமாகக் கொள்முதல் செய்யும் வாடிக்கைக்காரன் கேட்டவுடன் மறு பேச்சின்றி பதில் கூறுவது போல், "ஆஹா அதற்கென்ன? இத்தகைய கௌரவம் கிடைக்கக் கொடுத்து வைக்கவேண்டுமே?" என்றார் வாத்தியார்.

ராஜா தனது காரியதரிசியிடம் சிறிது நேரம் தாழ்ந்த குரலில் ஏதோ பேசிய பின்னர் பேரம் பேசும் வேலையை அவனிடமே விட்டுவிட்டு ராதாவிடம் விடை பெற்றுச் சென்றார்.

தான் ராஜாவுக்கு மாதம் ஐந்நூறு ரூபாய் விலையில் விற்கப்பட்டிருப்பதாக ஒரு மணி நேரத்திற்குப் பின்னர் செய்தியை அறிந்து அதனைச் சகஜமாக எடுத்துக்கொண்டாள் ராதா. முன் தன்னை அமர்த்தியிருந்த ஜமீந்தாரைப்போல் குரூரமாக இல்லை அல்லவா இந்த ராஜா என எண்ணிக் கொண்டாள்.

மறுநாள் பரிவாரங்களுடன் ஜவபுரி ராஜாவின் அரண்மனைக்கு மாற்றப்பட்டாள். அன்றிரவு ராதாவின் வீட்டில் நாட்டியம் நடைபெறவில்லை.

அரண்மனையின் மேல் மாடியில் நன்கு சிங்காரிக்கப்பட்ட பல அறைகளை ராதாவுக்கென்று ராஜா ஒதுக்கி யிருந்தார். அதில் வசித்து வந்த அவள் மூன்று மாதத்திற்குப் பின்னர் ஒருநாள் ஆழ்ந்த யோசனையில் மூழ்கி யிருந்தாள். குன்றுகளுக்குப் பின்னால் சூரியன் வீழ்ந்து கொண்டிருந்தான். நிலப் பரப்பின்மீது இருளின் சிறகுகள் விரிக்கப் பட்டு வந்தன. சந்தியா நேரத்தின் சோகச் சாயை அறையில் பரவி, ராதாவின் முகத் திலும் விளக்கியது.

மூன்று மாதங்களுக்குப் பின் முதன் முதலாகத் தனது நிலைமையையும் எதிர்காலத் தையும் பற்றித் தனக்குள் தீவிரமாகச் சர்ச்சை செய்து கொண்டிருந்தாள். அவள் தோன்றிய சூழ்நிலையிலுள்ள மற்றப் பெண்களைப் போலவே ராதாவும், எல்லாவற்றையும்விட விதியிலும் மதியிலும் நம்பிக்கை கொண்டிருந்தாள். வாழ்க்கையின் கனவுகள் அவளிடம் அதிகம் இருக்கவில்லை. வருவது வரட்டுமென விதியின் வழியை ஏற்றுக் கொண்டிருந்தாள். தான் பிறந்த குலத்தின் குறைகளை நன்கு அறிந்திருந்ததால் சமூகத்தின்மீது அவள் சிறிதும் துவேஷங் கொள்ளவில்லை. ஊரிலேயே சிறந்த அழகியாகவும், நாட்டியக் காரியாகவும் இருந்தாலும் விபசாரியின் மகள் விபசாரியாகவே இருந்தாள். ஐந்து ரூபாயை ஜேபியில் வைத்துக்கொண்டு தன்னை நாடிவரும் ஒவ்வொருவருக்கும் தன் உடலை விற்பதைவிடக் காதல் கலையில் தேர்ந்த அழகிய இளம் பணக்கார ஜமீந்தாரின் சொந்த ஆசைநாயகியாக இருப்பது எவ்வளவோ சிறந்ததுதான். இருப்பினும், இது அவளது அந்தஸ்தை எவ்விதத்திலும் உயர்த்துவதாக இல்லை. காதல், வீடு, வாசல், பிள்ளைப்பேறு முதலியவை தான் பிறந்த சமூகத்திலுள்ளவர்களுக்கு என்றுமே வாய்க்கல்ல என்பதை அவள் உணர்ந்தே இருந்தாள். இருந்தும் 'இன்று வருவது வரட்டும்' என்ற எண்ணம் மாறி, 'வாழ்க்கை இப்படி இருந்தால் தேவலையே' என்று கனவு காணத் தொடங்கினாள். மனைவியாய், தாயாய்க் குடும்ப பாரம் நடத்திச் சமூகத்திலே தானும் ஒரு இடத்தைப் பெறவேண்டுமென்று ஆசைப்பட்டாள். அவளது பிறப்பின் சூழ்நிலையைப் பற்றிய எண்ணத்தை யெல்லாம் மீறிப் பெண்மை தலைதூக்கத் தொடங்கி யிருந்தது.

இவ்வித எண்ணங்கள் ஏற்படுவதற்குக் காரணமாக இருந்தவள் ஜவபுரி ராணியாகும்.

ராஜாவின் இருப்பிடத்திற்கு ராதா வந்து சேர்ந்த நாளிலிருந்தே ராணியை நேரில் காண வேண்டுமென்ற ஆசை அவளுக்கு இருந்தது. ராணியின் பேரெழிலைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்த ராதா, இத்தகைய ஒரு



''டான்ஸ் ப்ரோக்ராமுக்கு ஆரம்பத்தில் தினத்துக்கு எழுபது, எண்பது பட்டை காலி பண்ணுவேன்...''



''போய் வாருங்கள், சுவாமி! உங்களுக்கு ஐந்நூறு. அது நாலு கோடி நமஸ்காரம் பண்ணுகிறேன்!''



''நல்ல மனுஷர் இவர்! சர்க்கார் பொருளாதார இலாகாவில் நிபுணர் உத்தியோகம் பார்த்தவர் போலிருக்கிறது!''

அழகி தனக் கிருக்கையில் மற்ற இடங்களில் இன்பம் துய்க்க ராஜா விரும்புவதேன் என்று வியப்படைவாள். பலமுறை, ராஜாவிடம் தான் அந்தப்புரம் போய்ப் பார்த்துவர விரும்புவதாகக் கேட்டும் தனது காதல் சாகசங்களால் இவளது கோரிக்கையை மறைத்து விடுவார். ''அன்பே, நாமிருவரும் காதலன் காதலியாவதற்காகவே படைக்கப் பட்டிருக்கிறோம். இந்தத் தெய்வீகக் காதலுக்கு இடையே வேறு யாரும் குறுக்கே நிற்பதை நான் விரும்பவில்லை'' என்பார். இருப்பினும் அவளுக்கு அந்தப்புரத்தைப் பார்க்க வேண்டுமென்ற ஆவல் நீங்குவதாக இல்லை. ராஜா தனக்கு அமர்த்தியிருந்த கிழட்டுப் பணிப்பெண்ணான லக்ஷ்மியிடம் தனது அந்தரங்கத்தைக் கூறினாள். ஒரு நாள் ராஜா வேட்டைக்குச் சென்றிருந்த சமயம் பார்த்துத் தன்னை வேலைக்காரியைப் போல் வேஷம் மாற்றி அந்தப்புரத்திற்கு அழைத்துச் செல்லும்படி கேட்டுக் கொண்டாள். அவ்விதமே ஒரு சந்தர்ப்பம் வாய்த்தது.

அழகும், கம்பீரமும், செல்வ மிடுக்கும் கொண்ட ராணி ஒரு பெரிய அறையின் மத்தியில் உயர அமைக்கப்பட்டிருந்த மேடையில் தனது தோழிகளும், பணிப்பெண்களும் புடைசூழ அமர்ந்திருந்தாள். இருட்டிலே மறைவாக இருந்து அவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த ராதாவுக்கு அவர்கள் தன்னைப் பற்றியே அப்பொழுது பேசிக் கொண்டிருக்கின்றார்கள் என்பதை அறிய ஆச்சரியமாக இருந்தது.

''ராணிஜி! நம் ராஜா அவர்கள் கொண்டு வந்திருக்கும் இந்தத் தெருச் சுற்றியைப்பற்றி நீங்கள் ஒன்றும் கவலைப்படாதிருக்கின்றீர்களே?'' என்று எரிச்சலுடன் தலைமை வேலைக்காரி கேட்டாள்.

இதைப் பற்றிக் கவலைப்படாத முறையில் ''அவள் நல்ல அழகி என்று கேள்விப் பட்டிருக்கிறேனே!'' என்றாள் ராணி.

ராணியின் பிரதம சகியான ஒரு ஜமீன்தாரின் கொழுத்த மனைவி இடைமறித்து ''ஆனால் உனது கணவனின் காதலை அவள் அபகரித்துக் கொள்வதைப் பற்றி நீ கவலைப் படவில்லையா?'' என்று கேட்டாள்.

ராணியின் பதில் உடனே வந்தது. தலை நிமிர்ந்து கர்வத்துடன் ராணி ''இத்தகைய ஒரு பெண்ணைப் பற்றி அருவைப் படுவது நம் அந்தஸ்திற்கு ஏற்றதல்ல. அது தவிர, ஒரு ராஜா தனது கேளிக்கைக்காகச் சில பெண்களை வைத்துக் கொள்வது ஒன்றும் புதிதல்லவே. என்னதான் இருந்தாலும் ஆசைநாயகியும் மனைவியும் சரிசமானமாகிவிடுவார்களா?'' என்று கூறினாள். அந்த வார்த்தைகள் ராதாவின் முகத்தில் பளீரென அறைந்தது போலிருந்தன.

ராதாவினால் அதற்குமேல் கேட்டுக் கொண்டிருக்க முடியவில்லை. வெட்கத்துடன் அந்த வீட்டிலிருந்து கிளம்பினாள். தன் இருப்பிடத்திற்குத் திரும்பியதும் வேலைக்கார லக்ஷ்மி தன்னை மன்னிக்கும்படி மிகவும் கேட்டுக்கொண்டு, ''எல்லாம் உங்க ளாலேதான் சேர்ந்தது'' என்று கூறினாள். ''ஆமாம், எல்லாம் என்னால்தான் நடந்தது. என்னைச் சும்மா விட்டுவிடு'' என்றாள் ராதா. அவளுக்குச் சிந்திக்க வேண்டுமெனத் தோன்றியது. 'ஒரு ஆசைநாயகியும் மனைவியும் சரிசமமாகி விடுவார்களா?' ராணியின் இவ் வார்த்தைகள் அவள் காதுகளில் ஒலித்துக் கொண்டிருந்தன. இவ் வார்த்தைகளில் பொதிந்து கிடக்கும் உண்மை அவள் உள்ளத்தை வாட்டி வதைத்தது. முகம் பார்க்கும் கண்ணாடி வைத்துக் காட்டுவது போல் இவ்வார்த்தைகளினால் ஜைபுரி ராணி காட்டியக்காரி ராதாவின் நிலையைக் காண்பித்து விட்டாள். ராதா தன் பிரதிபிம்பத்தைக் கண்டு நடுநடுங்கினாள்.

தர்க்க ரீதியாக விஷயங்களை ஆராய்ந்து பார்க்கும் தன்மை இருந்திருந்தால் தன் நிலை

யைப் பற்றி ராதா ஆய்ந்து ஓய்ந்து பார்த்திருப்பாள். ஆனால் ராதாவோ அப்பொழுது விசித்திரமான உணர்ச்சிகளால் தூண்டப்பட்ட சாதாரணப் பெண்ணாகவே இருந்தாள். 'ஒரு ஆசைநாயகியும் மனைவியும் சரிசமமாக இருக்க முடியாதா?' என்று மட்டுமே அவளுக்குப் பட்டது. எனவே நடக்க முடியாத ஒரு காரியத்திற்கு—மனைவியாவதற்குப்—பகீரதப் பிரயத்தனம் செய்வதெனத் தீர்மானித்தாள். இது சாத்தியமில்லை என்ற அவநம்பிக்கையினிடையே ஒரு லேசான நம்பிக்கையும் தோன்றியது. உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களையும் விடத் தன்னை மிகவும் காதலிப்பதாக ராஜா பலமுறை தன்னிடம் உறுதி கூறவில்லையா? ராதாவுக்கு இத்தகைய வார்த்தைகளைப் பலரிடம் கேட்டுப் புளித்துப் போயிருந்தது. அதனை ஒரு மௌனப் புன்னகையுடன் மனதிலிருத்திக் கொள்வாள். இத்தகைய காதல் மொழிகளில் அவள் நம்பிக்கை வைத்திருக்கவில்லை. ஆயினும் இவ்விள ஜமீந்தார் அடிக்கடி காதல் வார்த்தைகளைச் சொரிந்தாலும் அவர் தன்னை ஆசைநாயகியாக மதியாது, அன்புக்குரிய காதலியாகவே மதித்திருப்பதாக எண்ணினாள். வெற்றிக் களிப்பிலே மூழ்கியபோது இத்தகைய எண்ணத்தில் நம்பிக்கை வைக்கலானாள். தன்னை உண்மையாகவே காதலித்தால் தன்னை மணந்து கொள்ள மாட்டாரா? என்று எண்ணியபோதே அவள் முகம் மலர்ந்தது. மண வாழ்க்கையைப் பற்றிச் சுந்தரக் கனவுகள் கண்டாள். நிரந்தரமான வாழ்க்கை, சமூகத்தில் ஒரு கௌரவமான அந்தஸ்து, வீடு வாசல், குழந்தை குட்டி என்றெல்லாம் நினைக்க அவளுக்குச் சந்தோஷமாகவே இருந்தது. இந்தக் கற்பனைக்கு ஒரு விஷயம் களங்கமாக இருந்தது—குல ஸ்திரீயாகி விட்டால் அவள் நாட்டியமாட அனுமதிக்கப்படமாட்டாள் என்பதுதான் அது.

நாட்டியமே அவளது ஜீவநாடி. அவள் உடலிலும் உணர்விலும் ஊறிய விஷயம். தன் உணர்ச்சிகளை வெளிக் காட்டக்கூடிய சாதனம் அது ஒன்றே. நாட்டியமாடும் சந்தர்ப்பம் இல்லாவிட்டால் அவளுக்குச் சந்தோஷமாக இருக்க முடியாது என்று எண்ணினாள். ராஜாவின் மனைவியான பின்னரும் நாட்டியமாடுவது என்பதோ நினைக்கவே முடியாத விஷயம். தன் வீட்டிலே ஆடியபொழுது சுற்றிலும் கூடியிருந்த ரசிகர் கூட்டம் கை கொட்டி முழக்கியதைப் போல் இன்றும் பெறுவதற்கு அவளுக்கு எவ்வளவோ உள்ளூற ஆசை. நாட்டியமாட வசதியில்லாத வாழ்க்கை அவளுக்குச் சகிக்க முடியாததாகத் தோன்றியது. ராதாவின் உள்ளத்தே உறைந்த கலையுணர்ச்சி, இதனை எண்ணவும் நடுங்கியது. சமூக அந்தஸ்தில் உயர வேண்டுமென்றால் தியாகம் செய்து தானே ஆகவேண்டும்? மனைவியாகித் தாயாக விரும்பினால் நாட்டியப் பித்தை விட்டுவிட வேண்டியதுதான். பெண்மை என்னும் பேருணர்ச்சி கலையுணர்வை அடக்கிவிட்டது!

அப்போது முற்றத்தில் தோன்றிய பழக்கமான காலடியோசை ராதாவின் கனவைக் கலைத்தது. நாள் முழுதும் வேட்டையாடிய பெருமையில் ஊறிச் சந்தோஷமாக நடை போட்டுக் கொண்டு வந்தார் ராஜா.

"என் கண்மணி எப்படி இருக்கிறாள்?" என்று கேட்டு ராதாவின் கரங்களை எடுத்து ராஜா முத்தமிட்டார். தனக்குத் தோன்றியிருந்த உற்சாகத்தில் ராதா இச்செயலை உண்மைக் காதலின் செயலென மதித்தாள்.

சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டு சிகரெட் பிடித்த வண்ணம், "என் பிரிவு உனக்குக் கஷ்டமாக இருந்ததா?" என்று கனிவுடன் கேட்டார் ராஜா.

ராதா நாணத்துடன் ஆமெனத் தலையசைத்தாள். தனது உள்ளத்தை உறுத்திக் கொண்டிருந்த விஷயத்தைக் கேட்க இதுவே தருந்த சந்தர்ப்பம் எனக்கருதினாள்.

ராதாவின் முகத்திலே கவலைத்திரை மூடியிருப்பதைக் கண்ணுற்ற ராஜா "கண்ணே, உன் மனதை வாட்டும் விஷயம் யாதோ? உன் அன்பிற்குரிய காதலனாகிய என்னிடம் கூடவா கூற மாட்டாய்?" என்று கேட்டார்.

தனது தைரிய மனைத்தையும் வரவழைத்து ஒரே மூச்சில் "ராஜா சாகிப்! உங்களை நான் ரொம்பவும் காதலிக்கிறேன். நாமிருவரும் கணவன் மனைவியாக மட்டும் ஆகிவிட்டால்.......!" என்றாள்.

ஜெயபுரி ராஜாவுக்கு ராதாவின் வேண்டுகோள் ஒன்றும் ஆச்சரிய மளிக்கவில்லை. அவள் தன்னுடன் வசிக்க வந்த காலத்திலிருந்தே இதனை எதிர்பார்த்திருந்தார். 'அந்தக் கூட்டமே ஒரே மாதிரிதான்' என நினைத்துக் கொண்டார். அவரது ஒவ்வொரு ஆசைநாயகியும் கல்யாணப் பேச்சைப் பேசி அவருக்குத் தொல்லை கொடுத்து விட்டுத் தொலைந்தார்கள். ராதாவும் அதே கல்யாணப் பேச்சைப் பேசித் தானும் அந்த விதிக்கு விலக்கல்ல என்பதைக் காட்டி விட்டாள். இவளுக்காவது இப்படிப் பேசாதிருக்க புத்தி யிருக்காதா என்று ராஜா ஒரோர் சமயத்தில் எண்ணியதுண்டு.

"ராஜா சாஹிப், என்ன யோசித்துக் கொண்டிருக்கிறீர்கள்?" என அவரது கழுத்தைச் சுற்றித் தனது கைகளை வளைத்து "கல்யாணம் செய்து கொள்ளும் அளவு நீங்கள் என்னைக் காதலிக்கவில்லையா?" என்று கேட்டாள்.

ஆக்ஸ்போர்ட் கல்லூரி மாஜி மாணவனான ராஜா "சனியன், இவளும் தொல்லை கொடுக்கத் தொடங்கி விட்டாள்" என்று எண்ணினார். ஆனால் அவளோ நல்ல அழகி; அவளது அழகில் இன்னும் அவர் சலிப் படையவில்லை. எனவே அவளைச் சிறிது தட்டிக் கொடுக்க வேண்டும் என்றெண்ணினார்.

தமது கரங்களால் அவளை வாரி எடுத்து "என் கண்ணே! நீ கூட இந்தக் கல்யாணச் சடங்கு விஷயங்களை நம்புகிறாயே! நான் அதைவிட உயர்ந்த உன்னதமான காதலில் அல்லவா நம்பிக்கை வைத்திருக்கிறேன்? ஏதோ ஒரு புரோகிதன் மந்திரத்தை முணுமுணுத்து விடுவதால் மட்டும் நம் நிலைமையில் என்ன மாறுதல் ஏற்பட்டு விடுகிறது? காதலை மூடப் பழக்கங்களினால் கட்டிப் போடுவது மகா கேவலமல்லவா?" என்று சாமர்த்தியமாகக் கூறினார்.

அவரைக் கட்டிப் பிடித்துக்கொண்டே ராதா "ஆனால், என் அன்பரே! நாம் இந்த உலகத்தில்தானே வாழவேண்டியிருக்கிறது? உலகம் கட்டுப்பாடற்ற காதலை விரும்புவதில்லையே! உங்களுக்கு என்றும் நிரந்தரமாகச் சொந்தமாக இருக்கவே விரும்புகிறேன்" என்றாள்.

"ராதா! நீ அப்படியே இருக்கலாம். உன்னையொத்த உத்தமப் பெண்ணை என் வாழ்க்கையில் கண்டதே கிடையாது. இனிமேல் நான் காணப் போவதுமில்லை. நான் உன்னை என்றும் காதலிப்பேன் என்று சத்தியம் செய்கிறேன்.

"இது போதாதா? உலகம் சொல்வதைப் பற்றி நாம் ஏன் கவலைப் படவேண்டும்? நான் எவருக்கும் கடமைப்பட்டவனல்ல. நான் உயிருடனிருக்கும் வரை நீயும் அப்படியே இருக்கலாம். கல்யாணம் போன்ற அருப் பிடித்த மூடப் பழக்க வழக்கங்களை மறந்துவிடு. நான் இங்கிலாந்து, பிரான்ஸ், அமெரிக்கா முதலிய இடங்களுக்குச் சென்றிருக்கிறேன். அங்கெல்லாம் கல்யாணத்தைப் பற்றியே மக்கள் அக்கறை கொள்வதில்லை. அங்கு அனைவரும் கட்டுப் பாடற்று வாழ்கின்றனர். அவர்கள் காதல் ஒன்றையே நம்புகின்றனர்?" என்றார்.

ராஜா சாமர்த்தியமாகப் பேசக் கூடியவர். கல்யாணப் பித்துப் பிடித்த தமது ஆசை நாயகிகளிடம் காதல், பெண்மை ஆகியவற்றைப் பற்றி ஒரு குட்டிப் பிரசங்கம் செய்து அவர்கள் வாயைத் தணித்திருப்பது இது முதல் தடவையல்லவே. சாதாரணப் பெண்களைப்போல் பழக்க வழக்கங்களை அவ்வளவு மதிக்காத ராதா, கல்யாணத்தைப் பற்றித் தான் அப்பொழுது புதிதாகக் கொண்டிருந்த நம்பிக்கையிலிருந்து தளரத் தொடங்கினாள். ராஜாவின் காதலுரைகளும் சரசமும் மிகுதியிருந்த சந்தேகத்தையும் போக்கிவிட்டன.

அப்பொழுது கதவு தட்டப்பட்டு ஒரு பணிப்பெண் தோன்றினாள். "ராஜாசாஹிப், உங்களை ராணியம்மாள் பார்க்க விரும்புகின்றார்கள்" என்று அறிவித்ததும் ராஜா விரைவில் திரும்பி வருவதாக ராதாவிடம் கூறிவிட்டு அந்தப்புரம் நோக்கிச் சென்றார்.

அப்பொழுது ராதாவுக்குப் பலவேறு உணர்ச்சிகள் தோன்றின. இத்தகைய நல்ல குணம் படைத்த காதலரைப் பெற்ற தற்காகச் சந்தோஷப் படுவதா அல்லது அப்பொழுது சத்தம் போடாது வந்து மூலையில் அமர்ந்திருந்த முதுமை படைத்த லக்ஷ்மியைக் கண்டு வருத்த மடைவதா? என்ன செய்வதென்பது அவளுக்குப் புரியவில்லை. ஆனால் அந்தக் கிழவி அப்பொழுது அழுதுகொண்டிருந்தாள்.

"என்ன லக்ஷ்மி, ஏன் அழுகிறாய்?" என்று ராதா கேட்டாள். இந்தக் கிழவியின் மனதை என்ன கவலை வாட்டியதோ? இவளுடைய அனுபவங்களையும் உணர்ச்சிகளையும் அறிய ராதா எப்பொழுதுமே விரும்புவதுண்டு.

"ஒன்றுமில்லை, அம்மா!" என்று அக்கிழவி மாது கூறிக் கண்ணீர் பெருக்கி அழத் தொடங்கினாள். "இதுதான் விஷயம்; நானும் உங்களைப் போலவே ஒருநாள் இங்கு வந்தவள் தான்......" என்றாள். அப்போது அவளது குரல் உணர்ச்சி வேகத்தால் கனத்தது. "ராஜாசாஹிப் உங்களிடம் இப்பொழுது கூறியது போலவே இவருடைய தந்தையும் என்னிடம் கூறியிருக்கிறார்" என்று முடித்தாள்.

ராதாவின் கண்களை மறைத்திருந்த திரை விலகியது. அந்தப் பேதைக் கிழவி லக்ஷ்மியை பார்த்தபொழுது அவளது கண்களின் கண்ணாடியிலே தனது முகத்தின் பிரதி பிம்பம் தோன்றுவதைக் கண்டாள்.

அன்று இரவு ராதாவின் வீட்டிலே மீண்டும் நாட்டியம் தொடங்கியது!




## ★ ஜூலை முதல் தேதி

இந்த ஜூலை மாதம் 1-ந் தேதியை என்றும் மறக்க முடியாது என்று நினைக்கிறேன். என்னுடைய பதினைந்தாவது வயது முதல் தவறாமல் கதர் கட்டி வருகிறேன். இதுவரை கதர் கட்டி வந்ததினால் எனக்கு ஏற்பட்ட மகத்தான நன்மையும், கதர் உடுத்துபவர்களுக்கு ஜன சமூகத்தில் ஏற்பட்ட மதிப்பும் சாமான்யமல்ல. ஆகவே இப்போது கதரின் மதிப்புக்கும் பெரும் சோதனை காலம் வந்திருக்கிறது என்று சொன்னால் மிகையாகாது.

திருநாகேஸ்வரம் ஸ்டேஷன் எங்கள் ஊரிலிருந்து சுமார் 2 மைல் தூரத்தில் இருக்கிறது. மேற்படி ஸ்டேஷனுக்கு ஜூலை மாதம் 1-ந் தேதி காலை 6-30 மணிக்கு வண்டியைப் பிடிக்கக் கிளம்பிச் சென்றேன். ரயில் 7-22 க்கு வரவேண்டியது. நோட்டீஸ் போர்டில் 270 நிமிஷங்கள் தாமதமாக வரும் என்று கண்டிருந்தது. ஒரு வழியாக மேற்படி நிமிஷங்களை 60-ஆல் வகுத்து மணி கண்டுபிடித்து அடுத்த ரயிலில் கும்பகோணம் போய் அங்கிருந்து ஆடுதுறை போக எண்ணிக் கும்பகோணம் போய்ச் சேர்ந்தேன். அன்றைக்கென்று பாருங்கள் ஹோட்டல் ஸ்டிரைக். தெருவெல்லாம் காங்கிரஸ்காரர்களுக்கு மண்டகப்படி. பாவம்! பாமர மக்கள் என்ன கண்டார்கள்?' 'காங்கிரஸ்காரன் ஆட்சி நடக்கிறது. வரி ஏகப்பட்டது போடுகிறான். கேட்கப் போனால் ஹோட்டலில் சாப்பிடவேண்டாம் என்று காங்கிரஸ் நிதி மந்திரி சொல்லிவிடுவார்' என்று பலமான தாக்குதல்கள் நடைபெற்றன. அதே சமயம் ஒரு காங்கிரஸ்காரனின் வயிறு வாடுவதை அவர்கள் கண்டார்களா? நிற்க.

பஸ்ஸில் மெதுவாக இடம் தேடிப் பிடித்தேன். கண்டக்டர் டிக்கெட் கொடுக்கும் போதுதான் அவரவர்கள் மறுபடி தன் பர்ஸுக்குள் கை வைக்க நேர்ந்தது. ஒவ்வொரு ஊருக்கும் 0—0—6 முதல் 0—1—6 வரை சார்ஜ் ஏறிவிட்டது. கணக்காகச் சில்லறை கொண்டுவந்திருந்த பேர்வழி ஒருவருக்கு இது தூக்கி வாரிப்போட்டது. மனுஷ்யன் ஆரம்பித்துவிட்டார் வசை புராணத்தை. அவர் இருக்கும் வரை பஸ்ஸில் உட்காருவதற்கு எனக்கு யோசனைதான். கதர் கட்டுபவர்களுக்கு அவர் கொடுத்து வந்த ஆசிகள் வர வர அதிகரித்து எங்கே மேலே கையை வைத்து விடுவாரோ என்ற பயம். 'நல்ல ஜூலை 1-ந் தேதி வந்து சேர்ந்தது!' என்று வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டிருந்தேன். ஏனெனில் அந்தக் கூட்டத்தில் நானொருவன்தான் கதர் கட்டும் பாக்யமடைந்திருந்தேன். உண்மையைச் சொன்னால் கதர் கட்டுவதை விட்டுவிடலாமா என்றுகூட அந்த சமயம் எனக்கு யோசனை தோன்றியதென்றால் என் நிலைமையைத் தாங்களே ஒருவாறு ஊகித்துக் கொள்ளலாம். நானும் சர்க்காரின் வரிக் கொள்கையைக் கண்டிக்கிறேன் என்பது அந்த மனிதனுக்கு எப்படித் தெரியும்? தவறி ஏதாவது பேசி சாந்தப்படுத்தலாம் என்று நினைத்தால் ஆரம்பமே விபரீதமாகப் போய் விட்டால்...? இந்த ஜூலை 1-ந் தேதி யன்று எவ்வளவு பேர் என்போல் அனுபவப்பட்டார்களோ அறியேன். ஆனால் என் சம்பந்தப்பட்டவரை ஆகஸ்டு 15-ந் தேதியை விட இந்த ஜூலை 1-ந் தேதிக்கு சக்தி அபாரம் என்று நினைக்கிறேன்.

தற்சமயம் நாட்டில் கதர் கட்டுபவர்களின் மதிப்பு துரிதமாகக் குறைந்து வருகிறது என்பதை மறுக்க முடியாது. ஒரு காலத்தில் கதர் கட்டியவர்கள் எவ்வளவுக்கெவ்வளவு தலை நிமிர்ந்து நடந்தார்களோ அவ்வளவுக்கவ்வளவு தலையைத் தாழ்த்த வேண்டியிருக்கிறது என்பதை நினைக்க எனக்கு எல்லையில்லா மன வருத்தம் உண்டாகிறது.

நடுவக்கரை
4—7—49 ஆ. நாராயணசாமி

○●○

## ஹானர்ஸ் மாணவர்கள்

தாங்கள் சில நாட்களுக்கு முன் சென்னை பிரஸிடென்ஸி கல்லூரியில் கணித ஹானர்ஸ் பரீக்ஷை முடிவின் அலங்கோலத்தைக் குறிப்பிட்டிருந்தீர்கள்.

இண்டர்மீடியட்டில் முதல் வகுப்பில் தேறியவர்களும், பி. ஏ. வகுப்பில் நல்ல மார்க்கு வாங்கியவர்களும் திடீரென்று மண்டுக்களாய் விடுவார்கள் என்பது ஒரு போலிக்கூற்று. மேலும் என்னுடைய நண்பர்களான சிலருக்கு ஹானர்ஸ் மாணவர்கள் மாணவிகள், இன்னமும் தாங்கள் முதல் அல்லது இரண்டாம் வகுப்பில் தேறும் அளவிற்கு நன்றாய் எழுதியிருப்பதாக நம்புகிறார்கள். வைஸ் சான்ஸலர் வரைச் சென்று அவர்கள் மன்றாடிப் பார்த்தும் பலனில்லை.

இப்பொழுது இந்த ஹானர்ஸ் மாணவர்கள் நிலை பரிதாபகரமானது. மறுபடியும் ஹானர்ஸ்பரீட்சைக்குச் செல்லச் சட்டம் இடம் தரவில்லை. உத்தியோகம் பார்க்கச் செல்லலாம் என்றாலோ அவர்கள் அங்கு இண்டர்மீடியட் என்றே மதிக்கப் படுவார்கள். இவர்கள் பி.ஏ. பரீக்ஷை எழுதலாம். ஆனால் ஆங்கிலமும், இரண்டாம் மொழியும் சொந்தமாகப் படிக்க வேண்டும். இது மிகவும் சிரமமானது.

சில யோசனைகளைக் கல்வி அதிகாரிகள் கவனிப்பார்கள் என்னும் நம்பிக்கையில் கூறுகிறேன்.

ஹானர்ஸ் மாணவர்கள் பரீக்ஷைப் பேப்பர்களை மறுபடியும் திருத்த வேண்டும்; அல்லது இவர்கள் நிலையைக் கண்டு இரங்கி மறுபடியும் ஹானர்ஸ் பரீக்ஷை செல்ல அனுமதிக்க வேண்டும்.

மாதுங்கா
22—6—49 எஸ். எஸ். பார்த்தசாரதி

○●○

## ஒரு வார ஸ்டிரைக்

தற்போது சென்னை அரசாங்கத்தார் விதித்த புதுவரிகளில் சினிமா வரியும் ஒன்று. இது வரை சினிமா முதலாளிகளுக்கு விதித்

இருந்த தமாஷா வரியைப் பொது ஜனங்களே செலுத்தி வந்திருக்கிறார்கள். வருமானம் பூராவையும் முதலாளிகள் அடைந்திருக்கிறார்கள். அப்படியிருந்தும் இப்போது ஏற்படுத்திய வரியை ஆட்சேபித்து 30-6-49ல் ஸ்டிரைக் செய்யப்போகிறார்களாம்.

சினிமாவுக்கு ஏராளமான வருவாயிருந்தும் பொது நன்மைக்காகச் சொற்ப வரி விதிப்பதைச் செலுத்த மனம் வராது ஆட்சேபிப்பது எவ்வளவு மோசமான காரியமென்பதைப் பொது ஜனங்கள் உணராமலிருக்க முடியாது. இம்மாதிரி நிலைமையில் பொது ஜனங்கள் ஒருவாரகாலம் சென்னை மாகாணம் பூராவும் சினிமாவே பார்க்காமலிருந்து, அந்த நாளில் செலவழிக்கும் தொகையில் பாதியை உண்டியல்சேர்த்து சர்க்காருக்குக் கொடுத்து விட்டால் ஒரு கோடியல்ல; மூன்று கோடி ரூபாய் சர்க்கார் கஜானாவுக்கு வந்துவிடும். சினிமா முதலாளிகளும் ஏற்படவிருக்கும் நஷ்டத்தை உணர்ந்து முணுமுணுக்காமல் வரியை ஒழுங்காகச் செலுத்துவார்கள். இந்த மாதிரி ஒருவாரம் சினிமா பார்ப்பதில்லை என்று சினிமாப் பிரியர்கள் தியாகம் செய்து அரசாங்கத்துக்கு ஆதரவு கொடுக்க முன்வருவார்களா? வரத்தான் வேண்டும்.

செங்கற்பட்டு
27—6—49 மு. வெங்கடசாமி

○●○

## தூரப் பிரயாணிகளின் துயர்

சென்ற வாரம் நான் ஒரு காரியமாகப் புனாவுக்குப் போய்த் திரும்பி வரும்பொழுது மதராஸ் எக்ஸ்பிரஸில் கஷ்டப்பட்டுக் கூட்டத்தைச் சமாளித்துக் கொண்டு மூன்றாம் வகுப்பில் ஏறினேன். மூன்றாம் வகுப்பில் ஏறினால் தான் என்ன? உட்காரக்கூட இடம் கிடையாது. புனாவிலிருந்து ஜோலாப்பூர் வரை நின்றுகொண்டுதான் வரவேண்டியிருந்தது. இத்தனைக்கும் அந்த வண்டியில் "முன்னூறு மைல்களுக்கு மேல் பிரயாணம் செய்பவர்களுக்கு ரிஸர்வ் செய்யப்பட்டது" என்று எழுதியிருந்தது. எழுதியிருந்து என்ன பயன்? பக்கத்து ஸ்டேஷன்களில் இறங்குபவர்கள் கூடத்தான் அதில் பிரயாணம் செய்தார்கள். "உங்களுக்காக வேறு காரியேஜ் இருக்கிறதே. இது தூரப் பிரயாணிகளுக்கல்லவா ஏற்பட்டது?" என்று சொன்னால் அவர்கள் கேட்டால்தானே! "போங்கய்யா, என்னமோ வண்டியை விலை கொடுத்து வாங்கினவன் மாதிரியல்லவா பேசுகிறாய். உங்கப்பன் வீட்டு வண்டியோ!" என்று மராத்தி பாஷையில் கூச்சலிடுகிறார்கள்.

இவர்கள் தொல்லைதான் இப்படியிருக்கிறதென்றால், இந்தக் கும்பலின் நடுவில் டிக்கட் இல்லாமல் சிலபேர் இருக்கிறார்கள். அவர்கள் வண்டி நகரும் வரை சும்மா இருந்து விட்டுக் கொஞ்ச தூரம் சென்றவுடன் தங்கள் சங்கீதத் திறமைக் காட்ட ஆரம்பித்து விடுகிறார்கள். பிறகு ஒவ்வொருவரிடமாகக் கையை நீட்டிக் காசு கேட்கிறார்கள். அந்த வண்டியில் வசூல் முடிந்தவுடன் நம் பக்கத்தில் வந்து இடத்தை அடைத்துக் கொண்டு உட்கார்ந்து விடுகிறார்கள். இத்தகையோர்கள் ரயில்வே அதிகாரிகளைக் கண்டால் பெஞ்சுக்கு அடியிலோ வேறு எங்கேயாவதுமோ ஒளிந்துகொள்கிறார்கள். மற்றப் பிரயாணிகள் இவர்களை டிக்கட் பரிசோதகர்களிடம் காட்டிக் கொடுக்க முயலுவதில்லை.

பொது மக்களும், ரயில்வே நிர்வாகத்தாரோடு ஒத்துழைத்தால்தான் மூன்றாம் வகுப்பில் பிரயாணம் செய்யும் தூரப் பிரயாணிகளின் கஷ்டங்கள் நிவர்த்தியாகும்."

திருச்சி
27—6—49 எம். வெங்கடராமன்

○●○

## எழுத்தாளர்களுக்கு ஒரு வார்த்தை!

சென்ற இதழில் எழுதியிருக்கும் ஸ்ரீமதி சாரதாவின் கடிதத்தை நான் ஆர்வத்துடன் வரவேற்கிறேன். தற்கால கதாசிரியர்களுடைய மனப்போக்கை எண்ணும்போது வியப்புதான் உண்டாகிறது. அவர்கள் பெண்களை நகைக்காய்ச்சி மரமாகவும், எத்தனை செய்தாலும் திருப்தியின்றி இருக்கும் ஜன்மமாகவும், காரணமின்றிக் கண்ணீர் விடும் நீலிகளாகவுமே சித்தரிக்கிறார்கள்.

நவீன கதாசிரியர்களுக்குப் படித்த பெண்கள் என்றால் முகத்தில் முழ உயரப் பவுடரும், காளை மாடுபோல் மை தீட்டி விடப்பட்ட கண்களும், ரூஜ் பூசப்பட்ட கன்னங்களும், லிப்ஸ்டிக் போடப்பட்ட சாய உதடுகளும், பூபாரம் தொங்கும் பின்னலும், எதற்கும் பிறரை அலக்ஷியம் செய்யும் மனோபாவமும் கொண்டவர்களாகத் தோன்றுகிறார்கள் போல் இருக்கிறது. இவ்வாறு படித்த பெண்களைக் கேவலமாக வர்ணிக்கும் ஒவ்வொரு சமயமும் அந்த ஆசிரியர்களுக்குத் தாம் ஹாஸ்ய ஏணியில் ஒருபடி முன்னேறுவதாக எண்ணம் போலும்!

ஆனால் அதே சமயம் பெண் சமூகம் ஒவ்வொரு படி இழிவான நிலை அடைந்து வருகிறது. பெண்கள் மேன்மேலும் படிக்க ஆசைப்படும்போது பட்டிக்காட்டுப் பெற்றோர் "படித்த பெண்கள் லக்ஷணம்தான் பத்தி

## முகஸ்துதி!



முரட்டு மனிதர்:—உம்முடைய மணி பர்ஸை எடுத்துக் கொடுத்து ஒரு நல்ல ஆத்மாவைக் காப்பாற்றும்!

மெலிந்தவர்:— நீயா நல்ல ஆத்மா? உன்னைப் பார்த்தால் அப்படித் தோன்றவில்லையே, அப்பனே!

முரட்டு மனிதர்:—என்னைப் பற்றி யார் சொன்னது? உம்மைத்தான் நல்ல ஆத்மா என்று சொன்னேன்!



"ஏன் அப்பா! நம்மாள்வார் தெருவுக்குப் போகவேண்டும். எங்கேயிருக்கிறது?"

"நம்மாள்வார் தெருவா? ஏ! அப்பாடியோ! மூணு மைலுக்கு மேலே இருக்குமே! ஏறிக்குங்க! ஒண்ணரை ரூபா கொடுங்க!"

"நான் ரிக்ஷாவிலே போகப் போறதில்லே அப்பா, நடந்துதான் போகப் போறேன்! எங்கே யிருக்கு?"

"நடந்து போகப் போறீங்களா? போங்க! இந்தத் தெருவுக்கு மூணாவது தெருவு தானுங்க!"

---

சிகைகளில் சிரிப்பாய்ச் சிரிக்கிறதே!" என்று கூறி வாயடி அடிக்கிறார்கள். ஆகவே படித்த பெண்கள் கேவலமாக வர்ணிக்கப்படும் ஒவ்வொரு முறையும் பாமர ஜனங்களின் உள்ளத்தில் படித்த பெண்களைப் பற்றி வெறுப்பு உணர்ச்சிதான் ஆழப் பதிகிறது. பத்திரிகைகளில் படித்த பெண்களைப் பற்றி ஹாஸ்யரசமெனக் கருதிக் கேவலமாகப் பிரசுரித்துவிட்டு, கிராமங்களில் பெண் கல்வியைப் பற்றிப் போதித்தால் கிராம ஜனங்களின் உள்ளத்தில் எப்படி முன்னேற்றக் கருத்துக்கள் ஏற்படும்?

இனியாவது எழுத்தாளர்கள் படித்த பெண்களைப் பற்றித் தாம் கொண்டிருக்கும் எண்ணம் மிகவும் தவறானது என்று அறிந்து தங்களைத் திருத்திக் கொள்வார்களா?

மயிலாப்பூர்
27—6—49

ஜே. ஜயாய்

○●○

## நல்ல காலம் பிறக்குமா?

நான் 1948 மார்ச்சு மாதத்தில் இண்டர்மீடியட் பரீட்சையில் முதலாவதாகத் தேறின ஒரு ஏழை மாணவன். பலவிதமான அசௌகரியங்களினால் எனது மேல் படிப்புத் தடைப்பட்டுவிட்டது. உடைந்த மனதுடன் ஏதாவது ஒரு சரியான வேலையாவது பார்த்து அமரலாம் என்று மனப்பால் குடித்தவனும் தினம் பத்திரிகைகளில் வெளியாகும் தேவை விளம்பரங்களை ஒன்று விடாமல் பார்த்தெடுத்து ஒரு வருஷமாக விண்ணப்பம் போட்டு வந்தேன். ஒரு நாளைப்போல் தினமும், காலையில் போஸ்டுமேன் வரவை மிக ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருப்பதே எனது முதல் வேலையாக வைத்துக்கொண்டிருந்து ஏமாற்றமடைந்தேன். ஒரு விண்ணப்பத்துக்காவது பதில் வரவேண்டுமே? அது தான் கிடையாது. நான் விண்ணப்பம் அனுப்பாத ஒரு கம்பெனியாவது, பாங்காவது, ஆபீசாவது இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. அவர்கள் கம்பெனிக்கோ, ஆபீசுக்கோ ஆள் தேவையில்லை யென்றால், எதற்காக இவர்கள் "ஆள் தேவை" என்று பேப்பர்களில் விளம்பரப்படுத்தி, போஸ்டு ஸ்டாம்புக்கு விலை கூடி இருக்கிற இந்தக் காலத்தில், என்னைப்போலுள்ள 'பாமர மக்களிட மிருந்து வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கொள்ளுகிறார்கள் என்பது தெரியவில்லை.

எனக்கும் என்னைபோல் வேலையில்லாமல் திண்டாடுகிற ஏழை அன்பர்களுக்கும் ஒரு நல்ல காலம் என்று பிறக்குமோ?

நாகர்கோவில்
27—6—49

என். எஸ். மணி

○●○

## மனதை அடக்குவோம்!

3—7—49 இதழில் வெளி வந்த 'குறையில்லாக் குறை' என்ற தலைப்பில் ஸ்ரீ பாதசங்கர் ஜனப் பெருக்கக் குறைவை வேண்டுகிறார். வந்தவர்களை யெல்லாம் உபசரிக்கும் காமதேனுவைப் போன்றவர்களும், மணிமேகலையின் அக்ஷயப் பாத்திரத்தைப் போன்றவர்களுமான நாட்டு மக்கள் கேவலம் உணவிற்காக ஜனப் பெருக்கக் குறைவை நாடுகின்றனர் என்னும் விஷயம் மிகவும் வருத்தத்தை அளிக்கிறது.

அவர் கூறியபடி விவாக தம்பதிகளின் வயதை 18, 22 லிருந்து 20, 25 ஆக்கலாம். ஆனால், இயற்கைக்கு மாறாகச் செய்து ஜனனம் ஏற்படாதிருக்கும் வழியைக் கடைப்பிடிப்பது மிகவும் பாவம். 'எய்தவனிருக்க அம்பை நோவது போல்' கர்ப்பத்தடை செய்வது தன் நிலைமையையும், கஷ்டத்தையும் உணராது அற்ப சுகத்தைப் பெரிதெனக் கருதிக் கேவலம் மிருக இச்சைக்கு அடிமையாவதாகும். ஆனால் மிருகங்கள் கூட அவ்விஷயத்தில் மனிதர்களைவிட எவ்வளவோ வகையில் உயர்ந்திருக்கின்றன.

ஆதலால் மனதை அடக்கி, ஆசையை இறைவன் பால் செலுத்தி, நாட்டைச் செழிக்கச் செய்வதுடன், கர்ப்பத் தடை செய்யும் பாவகாரியத்திலிருந்து விலகிப் பரமனடியை அடையப் பாடுபடுவோமாக!

திண்டுக்கல்
4—7—49

ஆர். கிருஷ்ணகுமார்

○●○

## வரியும் திறமையும்

ராஜபாளையம் நகர சபையில் 12—4—49 அன்று சென்னைப் பிரதமர் கனம் பி. எஸ். குமாரசாமி ராஜா அவர்கள், "பணக்கார வியாபாரிகள் நல்ல லாபம் சம்பாதித்தால் தேன் கொட்டிக் கொள்கிறார்கள். ஆனால் அரசாங்கம் அதிகப்படி வரி போட்டால் மட்டும் கண்டிக்கிறார்கள். வியாபாரம் அரசாங்கத்தின் திறமையுள்ள நிர்வாகத்தைப் பொறுத்ததென்பதை அவர்கள் மறந்து விடுகிறார்கள்" என்று கூறியிருக்கிறார்.

ஆனால் தற்போது நம் சென்னை அரசாங்கம் விதித்திருக்கும் வரிகள் பல நேர்முகமாகவோ,

மறை முகமாகவோ ஏழை எளியவர்களான பொது மக்களேதான் பாதிக்கின்றனர். ஆகையால் மேற்படி வரி விதிப்பை வியாபாரிகள் மட்டுமல்ல, பொதுமக்களும் கண்டிக்கிறார்கள்.

தற்போது கச்சாப் பட்டின் விலையை விட, அதைக் கொண்டு தயாரிக்கப்பட்ட பட்டுத் துணியின் விலை மிகவும் குறைவாக இருக்கிறது. இதனால் வேறு தொழில் செய்யத் தெரியாத, பரம்பரை யாக நெய்வதையே தொழிலாகக் கொண்ட கைத் தறி நெசவுத் தொழிலாளிகள் பாதிக்கப் படுகிறார்கள்.

பெரிய மூலதனத்தைக் கொண்டு ஜவுளி வியாபாரம் செய்யும் முதலாளிகள் தாங்கள் உற்பத்தி செய்யும் பட்டு ஜவுளியினால் நஷ்டம் ஏற்படுவதைக் கண்டு, தாங்கள் நெசவாளர்களிடம் மேற்படி ஜவுளி உற்பத்திக்காகக் கூலிக்குக் கொடுக்கும் தறிகளைக் குறைத்துக் கொண்டே வருகிறார்கள்.

ஆகையால் பரம்பரையாக நெய்வதையே தொழிலாகக் கொண்டிருப்பதால் வேறு தொழில் செய்யத் தெரியாமல் பட்டுக் கைத் தறித் தொழிலாளர்கள் அல்லல் படுகிறார்கள்.

“வியாபாரம் அரசாங்கத்தின் திறமையுள்ள நிர்வாகத்தைப் பொறுத்தது” என்று சொல்லும் நம் பிரதமர் இதைக் கவனித்துப் பரிகார ஏற்பாடுகளைச் செய்வார் என்று தொழிலாளர்கள் எதிர் பார்க்கிறார்கள்.

மானம்புச்சாவடி
27—6—49
பொதுநல சேவாசங்கம்

○●○

## ★ “கையில் ஒரு குழந்தை,........”

3—7—49 ‘கல்கி’யில் வெளியாகியிருக்கும், “குறையில்லாக் குறை” என்னும் கட்டுரையில் எழுதி இருந்ததை நான் ஒப்புக்கொள்கிறேன்.

வாழ்க்கைச் செலவு உயர்ந்து வியாதிகள் மலிந்து இருக்கும் இக்காலத்தில் ஜனப்பெருக்கம் குறைந்தால் ஒழிய விமோசனமில்லை. ஆஸ்பத்திரி வாசலிலோ, டாக்டர் வீட்டு எதிரிலோ அரைமணி நேரம் நின்று பாருங்கள். எண்ணற்ற நோஞ்சைக் குழந்தைகளையும், பலவீனம் அடைந்த தாய்மார்களையுந்தான் காண முடியும். கையில் ஒரு குழந்தை, வயிற்றில் ஒரு குழந்தையுடன் அவர்கள் நின்று தத்தளித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தால் மனம் நொந்து போகிறது.

சாதாரண வருவாய் உள்ளவர்களுக்கு இரண்டு மூன்று குழந்தைகளை வளர்த்துப் பெரியவர்களாக்குவது சிரமமான காரியம். முன் காலத்தில் குழந்தைகளைப் பெறுவது பற்றியோ, வளர்ப்பது பற்றியோ கவலைப்படத் தேவையில்லாமல் இருந்தது நிலைமை. ஆனால் தற்சமயமோ, பெற்றோர்கள் தங்களுடைய கைத்தான பொறுப்பை உணர்ந்து தேசப் பிதாவான காந்தியடிகளின் “பிரம்மச்சரியம்” என்ற ஒப்பற்ற நூலில் கூறியுள்ளபடி வாழ முயலவேண்டிய நிலைமை ஏற்பட்டுள்ளது.

கட்டுரை ஆசிரியர், விவாக வயதை 18, 22 ஆக மாற்றிவிட்டால், பல கைக் குழந்தைகள் குறைந்துவிடும் என்று எழுதியிருப்பதை ஒப்புக்கொள்வதற்கில்லை. தற்சமயம், பணமுடையாலும் வரதட்சிணைச் சிக்கலாலும் பெண்கள் ஆண்கள் இருவர் விவாக வயதும் எல்லை மீறிக்கொண்டே இருக்கிறது. வயது அதிகமாவது மட்டும் முக்கிய காரணமல்ல. இருபது வயதில் கல்யாணம் ஆனாலும், வருஷம் ஒரு குழந்தை. சட்டும் சவலையுமாக நான்கைந்து வருஷங்களுக்குள் குறைந்த பக்ஷம் இரண்டு மூன்று குழந்தைகளுக்குத் தாயாகி விடுகிறாள். விவாகமான மறு வருஷம் ஒரு குழந்தை, பிறகு குறைப் பிரசவம். இப்படியாக ஒரு பெண் தன் 25, 30 வயதிற்குள் தன் இளமைப் பொலிவு, உடல் வலிமை யாவற்றையும் இழந்து நோயாளியாகி விடுகிறாள். இதற்குக் காரணம் பெண் மட்டுமல்ல. புருஷர்களின் தன் அடக்கக் குறைவும் பொறுப்பற்ற உணர்ச்சியுமே ஆகும்.

இந்த நிலை மாறவேண்டும். அப்பொழுது தான் இந்தியப் பெண்கள் நெஞ்சில் பெருமிதத்தோடு, உடலில் தெம்போடு, நல்ல ஆரோக்கியமுள்ள குழந்தைகளுக்குத் தாயாகி இந்தியாவின் எதிர்கால வீரர்களை நல்ல முறையில் வளர்க்க முடியும்.

அதிகப்படியான குழந்தைகள் வேண்டாம் என்று சொல்லும் பெண் ஏதோ மகத்தான குற்றம் செய்தவள்போல் நினைக்கும் மனப்பான்மை மக்களிடையே மாறவேண்டும். ‘தலையில் எழுதியவன் அழித்தா எழுதப் போகிறான்?’ ‘மரம் வைத்தவன் தண்ணீர் ஊற்றுவான்’ என்பன போன்ற மூட எண்ணங்கள் மறையவேண்டும். ஜனங்கள் சமுதாயத்துக்குச் செய்யும் தவறை எடுத்துக் காட்டிப் பிரசாரம் செய்ய சர்க்கார் முன் வர வேண்டும். சென்ற மாதர் மகாநாட்டில் ஸ்ரீமதி அனுசூயாபாய் காலே கூறியது போல் கர்ப்பத்தடைக் கிளினிக்குகளையும் யோசனைகள் கூறவைத்தியர்களையும் சர்க்கார் ஏற்படுத்த வேண்டும். மக்கள் இந்த விஷயத்தில் கவனம் செலுத்துவார்களாக.

தியாகராயநகர்
4—7—49
சரஸ்வதி

---

# வாடகை என்ன?



“என்டி, சுசீலா! உன்னுடைய பாட்டு வாத்தியார் என்னமோ ‘சுத்த பங்களா’ ‘சுத்த பங்களா’ என்று சொல்லிக் கொண்டிருந்தாரே! அந்த பங்களா எங்கே இருக்கிறது. என்ன வாடகை என்று விசாரிக்கிறதுதானே?”

“அது பங்களா இல்லே, அம்மா! அது ஒரு ராகத்தின் பெயர்!”

---

★ வட்டமேஜைப் பரிசுத் தொகை ரூ 25-ஐ ‘ஜூலை முதல் தேதி’ என்ற கடிதம் எழுதிய நடுவக்கரை ஸ்ரீ ஆ. நாராயணசாமிக்கும் ‘கையில் ஒரு குழந்தை’ என்ற கடிதம் எழுதிய தியாகராயநகர் ஸ்ரீமதி சரஸ்வதிக்கும் ரூ. 12-8-0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது.



# எனக்கு ஜீவனைக் கொடுங்கள்!

சீக்கிரம்! காற்று குறைகிறது. எனக்கு கெடுதி நேரப்போகிறது ஜாக்கிரதை! பார்க்கப்போனால் நான் ஒரு காற்றடைத்த பை. நான் தாக்கிச் செல்லும் கனத்தைப் பொறுத்து இத்தனை அளவு பவுண்டு காற்றைத்தான் உட்கொள்ளலாம் என்று அளவு ஒன்று உண்டு. அதிகமானால் என்னால் தாங்க முடியாது. குறைந்தாலோ எனக்கு கஷ்டங்கள் பல ஏற்படும்.

உங்கள் டயர்களுக்கு சரியான அளவுக்கு காற்றடையுங்கள்





## டன்லப்

DCX7TM

Edited, Printed and Published by R. Krishnamurthy, at the "Kalki" Press
116-119, Sladens Gardens, Poonamallee High Road, Kilpauk, Madras



## டி.எஸ்.ஆர். கோகுல் ஹேர் ஆயில்




டி.எஸ்.ஆர். கோகுல் கூந்தல் தைலம் அதன் அரிய வாஸனைக்கும் அபூர்வ குணத்திற்கும் பெயர் போனது. இது கூந்தலை கருகருவென்று நீண்டு வளரச் செய்வதோடன்றி, மூளைக்கு குளுமையும், அமைதி சுறுசுறுப்பையும் அளிக்கிறது.



## டி.எஸ்.ஆர். & கோ., கும்பகோணம்.

கோவை, நீலகிரி ஜில்லாக்கள் பாலக்காடுக்கு ஏஜண்டு:

B. பாலபட்டாபி

( Estd. 1933 )

த. பெ. நெ. 182, கோயமுத்தூர்

மதராஸ் டிப்போ:

157, லாயிட்ஸ் ரோடு

ராயப்பேட்டை, சென்னை

## அழகும் ஆரோக்யமும்



பண்டிட் டி. கோபாலாச்சார்லுவின்

# அருணா

கர்ப்பாசயரோக நிவாரணி



அழகுக்கு அவசியம் ஆரோக்யம். ஆரோக்யமும் சௌந்தர்யமும் பெண்ணினத்தின் பிறப்புரிமை. அருணா கர்ப்பாசய ரோகங்களை நிவர்த்தி செய்து தேகாரோக்யத்தையும் சௌந்தர்யத்தையும் அளிக்கவல்லது.



## ஆயுர்வேதாஸ்ரமம் லிட்.

(ஸ்தாபிதம் 1898)

மதராஸ் 17

REGD. No. M. 4392



# வீட்டில் தயாரித்த
# பனீர் கட்லெட்
# டால்டாவில் செய்தால் சுவைமிக்கதாயிருக்கும்!

5 கப் பாலை கொதிக்கவைத்து சில சொட்டுகள் எலுமிச்சஞ் சாறை பிழியவும். பால் பிரிந்ததும் அடுப்பிலிருந்து எடுத்து தனியாக வைக்கவும். உறைநீர் தெளிந்ததும் வடித்துவிட்டால் கெட்டியான பனீர் கிடைக்கும். (புளித்துப்போன பாலிலிருந்தும் மேற்கூறியபடி பனீர் எடுக்கலாம்). பனீரை மஸ்லின் துணியில் கட்டித்தொங்கவிடவும். நன்றாக உலர்ந்ததும் பச்சைமிளகாய் அல்லது மிளகு, பொடித்த சீரகம், ருசிக்குத் தகுந்த உப்பு இவைகளை கலக்கவும். கல்லையின் மேல் பரவ வைத்து சமமாக பரத்தவும். பனீர் கெட்டியானதும் சதுரம் சதுரமாக கத்தியால் நறுக்கவும். குழிவு குறைந்த வாணலியில் டால்டாவை சூடாக்கி சதுரக்கட்டிகளை சீக்கிரமாக பொரித்தெடுக்கவும். பனீர் கட்லெட்களை பொரித்த வெங்காயம், எலுமிச்சந்துண்டுகள் இவைகளோடு சூடாக பரிமாறவும். இதைப்போட்டு குழம்பு தயாரித்து சாப்பிட்டால் மிக ருசியாயிருக்கும்.

**எந்த உணவுகள் எளிதில் ஜீரணமாகின்றன?**

*இலவசமான ஆலோசனைகளுக்கு இன்றே—அல்லது என்று வேண்டுமானாலும்—எழுதுங்கள்!*

**டால்டா**
**அடவைஸரி ஸர்வீஸ்**

தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1




HVM. 100-172 TM